557

REGD. No. M. 890.





# ஆனந்த போதினி



# ANANDA BODHINI



Vol. 29. பொருளடக்கம். No. 11.

தாரண௵ வைகாசிமீ ௧௯

உள்ளடக்கம். பக்கம்.







# மூவர் அடங்கன் முறை

**திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் மூவரும் பாடிய தேவாரங்கள் முழுமையும் அடங்கிய பெரிய புத்தகம்.**

இவ்வருமையான புத்தகம் ஒவ்வொரு சைவர் வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டியதொன்று. இவ்வடங்கன் முறையினது பிரபாவமும் அருமையும் அளவிடுதற் கரியது. இதனை ஒவ்வொருவரும் அன்றாடம் விதிப்படி சிரத்தையோடு பாராயணம் பண்ணி வருவாராயின் இஷ்டகாமியார்த்தங்களை எளிதில் அடையக்கூடுமென்பது பெரியோர் துணிபு.

பிறவிப் பெருங்கடல் நீந்துதற்கு ஓர் அரும் பெரும் தெப்பமாயும் சைவ சமயத்துக்கோர் திலகமாய் விளங்கும் இத்துணை அரிய பெரிய நூலை அச்சிடாது வாளா இருத்தல் சைவ சமயத்தினருக்கே மிகவும் இழிவைத் தருமென்று கருதி அதிகச் செலவிட்டு ராயல் 8-பேஜ் சைசில் புதிய எழுத்துக்களால் சரித்திரக்குறிப்பு, ஸ்தலக்குறிப்பு, இராகம் முதலியன பிரித்து உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அழகாக அச்சிட்டிருக்கிறோம். கொஞ்சம் பிரதிகளே அச்சிட்டதால் சீக்கிரம் மிஞ்சிக்கொள்வோர்க்கே கிடைக்கும். பிறகு கிடைப்பது அரிது. **இதன் விலை ரூபா 5.**

# திருவிளையாடற் புராண வசனம்

சிவபெருமான், சோமசுந்தரக் கடவுளாக மதுரையம்பதியில் எழுந்தருளி அடியார்கள் உய்யும்பொருட்டு நடத்திக் காட்டிய அற்புதத் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கும் இதில் அடங்கியிருக்கின்றன. இந்நூல் சிவபெருமானுடைய மகிமைகளைத் தெள்ளிதில் உணர்த்தும். இன்னும் சிவபெருமான் அடியார்க் கெளியன் என்பதையும், அவர், தம்மை நம்பின பக்தர்களை ஆட்கொள்ளுதற்கு எத்தகைய தொழிலையும் புரிந்து அவர்களுக்குதவி செய்வான் என்பதையும், சிவனடியார் சிறப்புக்களையும், எல்லோருக்கும் விளக்கமாகத் தெரிவிக்கும். 64 திருவிளையாடல்களுக்கும் 64 ஐதீகப்படங்கள் சேர்க்கப்பட் டிருக்கின்றன. காலிகோ பைண்டு செய்தது.

**இதன் விலை ரூபா 2.**

# ஸ்ரீமத் பகவத்கீதை வசனம்

இது, பாரதப் போரில், யுத்தகளத்தில் அருச்சுனன் தன் தாயாதி முதலியோர்களைக் கண்டு, மயக்கங்கொண்டு, தனது க்ஷத்திரிய தருமத்தைக் கைநெகிழவிடுத்தபோது ஸ்ரீ பகவான் அவனுக்கு உண்மை விளங்க உபதேசித்தருளிய சிறந்ததோர் தத்துவ நூல்; எல்லாப் பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பட்டு எல்லாராலும் பொன்னேபோற் போற்றப்படுவது; கன்ம, ஞான, பக்தியோகம் முதலியவற்றை விளக்கமாக எடுத்துரைப்பது; பதினெட்டு அத்தியாயங்களைக் கொண்டது. **இதன் விலை ரூபா 1-8-0**

# குசேலோபாக்கியான வசனம்

குசேலர் மேல் கடலடைந்தது, வடமதுரை சிறப்பு, கடைவீதியின் சிறப்பு, அவந்திக்கடுத்த மலையுச்சியிலுள்ள பிராமணச் சேரியின் சிறப்பு, குசேலர் திருமணம், குசேலர் துவாரகை சேர்தல், ஸ்ரீ கண்ணனுடைய அந்தப்புரத்தின் சிறப்பு, கிருஷ்ணன் குசேலர் கொண்டுபோன அவலை வாங்கி உண்ணுதல், ஒரு பிடி அவலுக்கு மேல் உண்ணலாகாதென்று உருக்குமணி கிருஷ்ணனைத் தடுத்தல், குசேலர் செல்வம் வந்து வைகுந்தமடைந்தது, குசேலரை அவர் மனைவி உபசரித்து கொண்டாடுதல், குசேலர் விஷ்ணுவைத் தோத்திரஞ் செய்தல். **இதன் விலை ரூபா 1.**

---

**ஆனந்தபோதினி காரியாலயம், சௌகார்பேட்டை, சென்னை.**

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.

| | | |
|---|---|---|
| தொகுதி 29 | தாரண ௵ வைகாசி ௴ ௧௳<br>1944 ௵ மே ௴ 14௳ | பகுதி 11 |

## கடவுள் வணக்கம்.

பாவமே புரிந்து அகலிடம் தன்னில்
பலபகர்ந்து அலமந்து உயிர் வாழ்க்கைக்கு
ஆவென்று உழந்து அயர்ந்து வீழாதே
அண்ணல் தன்திறம் அறிவினால் கருதி
மாவின் ஈருரி யுடை புனைந்தானை
மணியை மைந்தனை வானவர்க்கு அமுதைத்
தேவ தேவனைத் திருத்தனை நகருள்
சிவக் கொழுந்தினைச் சென்றுஅடை மனனே. (1)

---

ஒன்றலா உயிர் வாழ்க்கையை நினைந்திட்டு
உடல் தளர்ந்து அருமாநிதி இயற்றி
என்றும் வாழலாம் எமக்குஎனப் பேசும்
இதுவும் பொய்யெனவே நினை உளமே!
குன்றுலாவிய புயமுடை யானைக் கூத்தனைக்
குலாவிக் குவலயத் தோர்
சென்றெலாம் பயில் திருத்தனை நகருள்
சிவக் கொழுந்தினைச் சென்றுஅடை மனனே. (2)

---

வேந்தராய் உலகாண்டு அறம் புரிந்து
வீற்றிருந்த இவ்வுடல் இது தன்னைத்
தேய்ந்து இறந்து வெந்துயர் உழந்திடும்இப்
பொக்க வாழ்வினை விட்டிடு நெஞ்சே!
பாந்தளங் கையில் ஆட்டுகந் தானைப்
பரமனைக் கடற் சூர் தடிந்திட்ட
சேந்தர் தாதையைத் திருத்தினை நகருள்
சிவக் கொழுந்தினைச் சென்றுஅடை மனனே. (3)




# வாழ்க்கைத்தரம் உயர உதவுக!

"அறியாமை, வறுமை (அதாவது தேவை), நோய், சோகை, சோம்பேறித்தனம் ஆகிய ஐந்து அரக்கர்களுடன் பிரிட்டன் போராட வேண்டியிருக்கிறது" என்று ஸர். வில்லியம் பேவரிட்ஜ் முன்னொரு சமயம் கூறினார். கல்வியறிவு, வாழ்க்கைத்தரம், நாகரிகம் உயர்வாக உள்ள பிரிட்டனிலேயே இத்தகைய இழிநிலைமை இருக்குமானால், அறியாமை, ஏழ்மை மிகுந்த நம் நாட்டைப் பற்றிக் கேட்க வேண்டுமோ! தத்துவப் பேராசிரியர் ஸர். எஸ். ராதாகிருஷ்ணன் குறிப்பிடுவதுபோல், படுக்கையில் படுக்கும் சுகத்தை அனுபவிக்காதவர்களும், சமைத்த உணவைச் சுவைக்காதவர்களும், அழுக்கும் அசுத்தமும், புழு பூச்சிகளும் தங்களுடன் சேர்ந்து பிறந்தவை என எண்ணுபவர்களும் நம் நாட்டில் லட்சக் கணக்காக இருக்கிறார்கள். இந்த இழி நிலைமை மாறவேண்டுமோயின் நமது சமூக அமைப்பு முறை மாற்றி யமைக்கப்பட வேண்டும்.

மேற்குறித்தவை யனைத்தும் ஒழிந்து நமது சமூக அமைப்பு முறை மாற்றி யமைக்கப்பட வேண்டுமானால், முதலாவதாக மக்களின் அறியாமையைப் போக்க முயல வேண்டும்; அதாவது கல்வியறிவை ஏற்படுத்த வேண்டும். உண்மையான கல்வியறிவு மட்டும் மக்களுக்கு அடிப்படையாக ஏற்பட்டு விட்டால், விவசாயம், கைத்தொழில் முதலிய துறைகளில் விஞ்ஞான அறிவு உண்டாகிவிடும். இதன் பயனாக, பொருளாதாரத் துறையில் அபிவிருத்தி ஏற்பட்டு, வறுமை ஒருவாறு நீங்கும். கல்வி யறிவினால், சுகாதார முறையை யறிந்து வாழ்க்கை நடத்தினால், நோய் முதலிய பீடைகள் ஒழியும், உயர்வு தாழ்வு என்ற விபரீத மனோபாவம் ஒழிவதால், சாதி சமய வேற்றுமை அறவே ஒழியும். உலகில் உள்ள எல்லாத் தீமைகளிலும் மகா கொடியதான யுத்த வெறி இல்லா தொழியும். கல்வியும், கலைஞானமும் பெருகினால், மக்கள் உள்ளத்தில் 'நயத்தகு நாகரிக' உணர்ச்சி ஏற்

பட்டு, சுயநலம், பேராசை, பொறாமை முதலிய கொடுங்குணங்கள் மாய்ந்தொழியும். மற்றவர்களைச் சுரண்டுவதற்கான சுதந்திரத்தை மக்கள் கேட்கமாட்டார்கள். உண்மையான சுதந்திரம் நிறைந்த புதிய உலகையே அவர்கள் விரும்புவார்கள். தேசத்திலுள்ள மக்களில் ஒரு சிலர் மட்டும் கல்வி கற்றவர்களாக-கலைஞர்களாக-விளங்கினால் பயனில்லை. எல்லோரும், கல்வி யறிவும் கலைஞானமும் பெறவேண்டும். ஏனென்றால், மக்களின் மனோபாவம் அடியோடு மாறினாலன்றி மேற்குறித்த எதுவும் சித்திக்காது. மக்களுக்கு ஒழுங்கான கல்வி யறிவு முதிர முதிர, பாரமார்த்திக உணர்ச்சியும் வாழ்வும் ஏற்பட்டு வாழ்க்கை யமைப்பை ஒழுங்காக்கி, வாழ்க்கையின் தரத்தை உயர்த்தும் என்பது நம் கருத்து மட்டுமல்ல; பேரறிஞர்களின் அபிப்பிராயமு மாகும்.

நாம் மேற்குறித்தவாறு மக்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதற்கும், சமூக அமைப்பு முறையை மாற்றி யமைப்பதற்கும் தற்போதைய கல்வித் திட்டம் துணை செய்யுமா? என்றால், செய்யாது என்றே வருத்தத்தோடு சொல்ல வேண்டியிருக்கிறது. தற்காலத்தில் நம் நாட்டு மக்களுக்குப் புகட்டப்படும் கல்வி நம் மக்கள் வாழ்க்கை நலத்துககு ஒவ்வாததாகவும், மிகக் குறுகிய நோக்கங் கொண்டதாகவும் இருப்பதாகக் கருதி தேசீய உணர்ச்சி கொண்ட அறிஞர்களெல்லாம் அதிருப்தி கொண்டிருக்கிறார்கள். ஆகவே, தற்போதைய கல்வி நம் மக்கள் எல்லோருடைய முக்கிய தேவைகளையெல்லாம் நிறைவேற்றி வைக்கக் கூடியதாகத் திருத்தியமைக்க வேண்டுமென்று அவர்கள் வற்புறுத்தி வருகிறார்கள். நமது மாகாண சர்க்கார் 1937-ம் ஆண்டில் ஆரம்பக் கல்வித் திட்டமொன்றை அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். நாட்டில் உள்ள எல்லா மக்களுக்கும் சிறிது சிறிதாக படிக்கவும், எழுதவும் பயிற்சியளிக்க வேண்டுமென்ற முக்கிய நோக்கத்தோடு அமைக்கப்பட்ட அத் திட்டம் இவ்வளவு வருஷங்களுக்கு பின்னும், எவ்வளவு தூரம் பலன் அளித்திருக்கிறது என்பது சீர்தூக்கிப் பார்ப்பவர்களுக்குத் தெரியும். "கட்டாயக் கல்வி ஏற்படுத்துவதற்கு வேண்டிய அதிகாரம் மாகாண சர்க்கார்களுக்கு வந்து 25 வருஷங்களாகின்றன. ஆனால், இவ்விஷயத்தில் ஓரிடத்திலாயினும் அபிவிருத்தி ஏற்பட்டிருப்பதாக தெரியவில்லை." என்று ஸர். என். கோபாலசாமி ஐயங்கார் சமீபத்தில் சிதம்பரத்தில் நடந்த மாகாணக் கல்வி மகாநாட்டில் குறிப்பிட்டிருப்பது இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. 40 வருஷங்களுக்கு முன் ஸ்ரீ. கோபால கிருஷ்ண கோகலே, நம் நாட்டில் மக்களுக்கு கட்

டாய இலவசக் கல்வி ஏற்படுத்த வேண்டுமென்று இந்திய அரசாங்கத்திடம் வற்புறுத்திக் கூறி வந்திருக்கிறார். ஆங்கிலத்தைத் தவிர, மற்ற எல்லா பாடங்களிலும் மெட்ரிகுலேஷன் வகுப்பு அளவு ஞானம் ஏற்படுமாறு கல்வி போதிக்க வேண்டுமென்று காந்தி யடிகள் தாம் வகுத்த வார்தா கல்வி திட்டத்தில் கூறியிருக்கிறார். ஆனால், இப்போது வெளி வந்திருக்கும் சார்ஜண்டு திட்டத்தில் இந்த அளவுக்குப் போதியவாறு கல்விமுறை அமைக்கப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை. அந்தந்த கால வாழ்க்கைக்குத் தேவையான அளவு அறிவு புகட்டக் கூடிய கல்வித் திட்டம் இல்லாவிடில், மக்களுக்குப் பயனில்லை. "ரஷியாவில் 1930-ம் வருஷத்திலிருந்து 13 வருஷங்களுக்குள் கட்டாயக் கல்வி முறை அமுலுக்கு வந்துவிட்டது" என்று ஸர். கோபாலசாமி ஐயங்கார் எடுத்துக் காட்டி, "பம்பாய் திட்டப்படி 15 வருஷங்களுக்குள் கட்டாயக் கல்வி முறையை அமுலுக்குக் கொண்டு வர முடியும்" என்று கூறி யிருக்கிறார்.

"எழுதப் படிக்கத் தெரிவது மட்டும் கல்வி அல்ல. குழந்தைகள், மனிதர்களிடமுள்ள உள்ளுணர்ச்சிகளை வெளிக் கொண்டு வருவதுதான் உண்மையான கல்வி" என மகாத்மா காந்தி கூறியிருக்கிறார். இவ்வுண்மைக் கல்வியை அடிப்படையாகக் கொண்டு வகுத்த வார்தா கல்வி முறையை பீகார், ஒரிஸா முதலிய பிற மாகாணங்கள் அமுலுக்குக் கொண்டுவந்தும், நம் மாகாணம் பின்பற்றாதது ஏன் எனத் தெரியவில்லை. தற்போதுள்ள அரசாங்கத்தை, கல்வி விஷயத்தில் மட்டுமல்ல; மற்றெவ் விஷயத்திலும் எதிர்பார்ப்பது சிறிதும் பயனில்லை. நம் நாட்டிலுள்ள அறிஞர்களும், செல்வர்களும் தம் சகோதர மக்களின் அறியாமையையும் வறுமையையும் போக்கி வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முயல வேண்டும். "அறிந்தார், அறியாதார் என்ற வேற்றுமை யின்றி உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற உணர்ச்சியின்றித் தாம் தாம் கற்றதை மற்றோரோடு கலந்து 'நாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற உயர்ந்த கொள்கையை உளத்தமைத்து வேண்டுவன செய்ய வேண்டும்" என்று சமீபத்தில் நடந்த சென்னை மாகாண தமிழ்ப் புலவர் மகாநாட்டில் வரவேற்புக் கழகத் தலைவர் பேசியிருப்பது நம்மவர்க்கு நல்லுணர்ச்சியை உண்டு பண்ணுமென்று நம்புகிறோம். கல்வி யறிவை வளர்ப்பது வாயிலாக நம் நாட்டுமக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த அறிஞராயினோர் ஒவ்வொருவரும் முன் வரவேண்டும் என நாம் கேட்டுக் கொள்ளுகிறோம்.

# ஸர். ஐஸக் நியூடன்

(நத்தேனியல் ஹாத்தோர்ண்.)



**1642**-ம் ஆண்டு கிறிஸ்துமஸ் தினத்தன்று, லின்கன்ஷயரைச் சேர்ந்த வூல்ஸ்தோர்ப் என்னும் சிறு கிராமத்தில் ஐஸக் நியூடன் அவதரித்தார். தன்னுடைய புதுக் குழந்தையைக் கண்ணுற்ற அவனுடைய அன்னை, உலகம் தோன்றியதிலிருந்து மர்யமாய் இருந்த அநேக உண்மைகளை விளக்க ஐஸக் தோன்றியுள்ளான் என்று சற்றும் கருதவில்லை.

ஐஸக்கின் தந்தை இறந்த பின்பு, ஸ்ரீமதி நியூட்ன் ஒரு அர்ச்சகனை மணந்து கொண்டு நார்த்விதாம் என்னு மிடத்தில் குடியேறினள். ஐஸக் அவனுடைய பாட்டியின் பராமரிப்பில் விடப்பட்டான். அந்தப் பாட்டி மிகவும் நல்லவள். அவள் அவனை பள்ளிக்கனுப்பிப் படிக்க வைத்தாள். அந்த இளம் வயதில் ஐஸக் படிப்பில் கெட்டிக்காரனாகத் தோன்றவில்லை. ஆனால் இயந்திர வேலைகள் (mechanical occupations) செய்வதில் சமர்த்தனென்று பெயர் பெற்றிருந்தான். தானே செய்த சில சிறு ஆயுதங்களும், வெவ்வேறு அளவில் சில ரம்பங்களும் வைத்திருந்தான்.

இவைகளைக் கொண்டு சில நூதனமான சாமான்களை மிகத் திறமையுடன் செய்தான். அவனுடைய மிகுந்த திறமை, ஒரு வேளை அவன் பிறக்கும்போதே கையில் ரம்பத்துடனே அல்லது உளியுடனே பிறந்திருக்கக் கூடுமோ என்றெண்ணும்படி விளங்கியது. அக்கம்பக்கத்தி லுள்ளவர்கள் ஐஸக் செய்த அபூர்வ சாமான்களை பேராச்சரியத்துடன் நோக்கினார்கள். அவனுடைய பாட்டி தன் பேரனைப் பற்றிப் பேசுவதில் சற்றும் அயர்வதில்லை. "இன்னும் சில நாட்களில் அவன் சிறந்த வேலைக்காரன் ஆகிவிடுவான்" என்பாள். சில சமயம், "ஐஸக் மிகச் சிறந்த வேலைகள் செய்து, தான் சாகு முன் பெரும் செல்வந்தனாகி விடுவான் என்பதில் ஐயமில்லை" என்றும் கூறுவாள் அவன் பாட்டி.

அவளுடைய நண்பர்களில் சிலர், ஐஸக்கை ஒரு கடிகாரம் செய்யும் தொழிலாளியிடம் வேலை பழக விடும்படி யோசனை கூறினார்கள். ஏனெனில், ஐஸக் இயந்திர வேலைகளில் கெட்டிக்காரனாயிருந்ததோடு கணக்கிலும் மிக்க பிரியம் உடையவனாக இருந்தான். கணிதம் அவனுக்கு அத்தொழிலில் நிரம்பவும் உதவியாயிருக்கும். அதன் பிற்பாடு சிறிது காலத்துக்குள் ஐஸக் சுயமாக, நர்த்தனம் புரியும் அநேக நவமான பொருள்களைக் கொண்ட அற்புதமான கடிகாரங்களை உற்பத்தி பண்ணலாம்.

பிற்காலத்தில் ஐஸக் கடிகார உற்பத்தியில் ஈடுபடக்கூடும் என்று ஊகிக்க உண்மையில் சில ஆதாரங்கள் இருந்தன. என்னவென்னில் அதற்கு முன் எவரும் கண்டு கேட்டிராத புது வகையான கடிகாரம் ஒன்றைத் தானுக அவன் சமைத்திருந்தான். அது சக்கரங்கள், நிறைகள் இவற்றுடன் இயங்கவில்லை. ஆனால் சொட்டிக்கொண்டிருக்கும் தண்ணீரால் இயங்கியது.

சுற்றுமிருந்த ஜனங்களுக்கு அது ஒரு ஆச்சர்யகரமான பொருளாயிருந்தது. ஆனால் ஒரு கிண்ணத்திலுள்ள நீரின் அளவைக்கொண்டு மணி இன்னதென்று கண்டு பிடித்துச் சொல்ல ஒரு சில பையன்கள் அல்லது பெரியவர்களுக்கு மட்டுந்தான் முடிந்தது என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். இத்துடன் நில்லாமல் ஐஸக் ஒரு சூரிய கடிகையும் (Sun-dial) செய்தான். இவற்றினால் அவனுடைய பாட்டிக்கு மணி அறிந்து கொள்ள கஷ்டமில்லாதிருந்தது. ஏனென்றால் சூர்யன் பிரகாசிக்கையில் சூரியகடிகையிலிருந்தும், நிழலில் நீர்க் கடிகையி (water clock) லிருந்தும் மணி அறிய ஏதுவாயிற்று.

அன்று ஐஸக் செய்த சூரிய கடிகை வூல்ஸ் தோர்ப்பில் அவன் வாழ்ந்துவந்த வீட்டின் ஒரு மூலையில் இன்னும் இருக்கிறது. அது ஐஸக் சிறுவனாயிருந்த காலத்திருந்து சூர்யனின் கதியை காட்டியிருந்திருக்கவேண்டும். அக் கடிகை ஐஸக்கின் வாழ்க்கையில் புகழ் ஓங்கியிருந்த காலங்களைக் காண்பித்தது; ஐஸக் உலகை நீத்த நேரத்தையும் குறித்தது. அவன் முதல் முதலில் அதை உற்பத்தி செய்து முடித்த காலத்தில் போலவே இன்னும் அதன் மீது கதிரவனின் ஒளி தவழ்ந்து செல்கின்றது.

ஐஸக்கிடம் இலகுவான முறைகளில் அறிவை விருத்தி செய்து கொள்ளக்கூடிய அபூர்வ மனேசக்தி இருந்தது. உதாரணமாக, காற்றின் பலத்தைக் கணக்கிட அவன் என்ன முறையைக் கையாண்டிருப்பான் என்று நினைக்கிறீர்கள்? கண்ணால் காண இயலாத-ஓரிடத்தும் ஓய்ந்து நில்லாத-கட்டுப்படுத்த முடியாத அற்புதம் வாய்ந்த காற்றை எப்படி அச் சிறுவன் தன் சக்தியின் அளவைக் கூறும்படி பலவந்தப் படுத்தினன் என்பதை உங்களால் ஒருநாளும் ஊகித்துச் சொல்ல முடியாது. அவன் செய்த முறையைப் போல வேறொன்றும் அவ்வளவு எளிமையாயும் இலகுவாயும் இராது.

அவன் காற்றடிக்கும் திசைக்கு எதிராகக் குதிப்பான். தான் குதித்த தூரத்தைக்கொண்டு மெல்லிய காற்று, சற்று உக்கிரமான காற்று, புயல் இவற்றின் விசையைக் கணக்கிடுவான். இவ்வாறு தன் குழந்தை விளையாட்டுக்களில் கூட அவன் தத்துவங்களின் இரகசியங்களை இடைவிடாது ஆராய்ந்து வந்தான்.

அவனுடைய பாட்டியின் இல்லத்திற்கு அருகாமையில், புது முறையில் இயக்கப்பட்டு வந்த ஒரு காற்றுடி யந்திரம் (windmill)

இருந்தது. ஐஸக் அவ்விடத்திற்குச் சென்று, அதன் பல பாகங்களையும் மணிக்கணக்காக ஆய்ந்து பார்ப்பது வழக்கம். அந்த இயந்திரம் ஓடாமல் இருக்கும்போது, அதன் உட்புற அமைப்பைக் கூர்மையாய்ப் பரீட்சை செய்து பார்ப்பான். காற்றாடி சுற்றும்போது எப்படி யந்திரக்கல் (millstone) சுற்றப்பட்டு தானியங்களை அரைக்கிறது என்பதைக் கவனிப்பான். அந்த இயந்திரத்தின் முழு அமைப்பைப்பற்றிய சகல விஷயங்களையும் அறிந்து கொண்ட பின் தன் ஆயுதங்களுடன் அலுவலாயிருப்பான்.

ஐஸக் ஒரு மாதிரிக் காற்றாடி யந்திரம் செய்து முடித்தான். அதன் சகல பாகங்களும், அவற்றின் அமைப்பும் சரியாக இருந்தன. அந்த யந்திரத்தின் காற்றாடி, காற்றடிக்கும்போது வெகு வேகமாய்ச் சுழலும். ஐஸக்கின் வாயால் ஊதப்படும் காற்று அல்லது இரண்டு துருத்திகளிலிருந்து வெளிப்படும் காற்றே அக் காற்றாடியைச் சுழற்றப் போதுமானது. ஒரு சிரங்கை தானியத்தைத் திரிகையி லிட்டால் அது மறு நிமிடத்தில் பனிபோல் வெண்மையான மாவாக அரைக்கப்பட்டு விடும்.

ஐஸக்கின் விளையாட்டுத் தோழர்கள் அவனது புது இயந்திரத்தைக் கண்டு பேராச்சரியம் கொண்டனர். இவ் வுலகத்திலேயே இம் மாதிரியான அழகிய பொருள் காண முடியாது என்று நினைத்தனர். அவர்களில் ஒருவன், "ஆனால், ஐஸக்! இயந்திரத்திற்கு வேண்டிய ஒன்றை நீ மறந்து விட்டாய்!" என்றான்.

"என்ன அது?" என்று கேட்டான் ஐஸக். அவன், தான் யந்திரத்தின் உச்சியிலிருந்து அடி வரை எதையும் மறக்கவில்லை என்று எண்ணிக் கொண்டிருந்தான்.

"ஏன், யந்திரக்காரன் எங்கிருக்கிறான்?" என வினவினான் ஐஸக்கின் தோழன்.

"உண்மைதான். நான் ஒருவனைத் தேடிப் பிடிக்கவேண்டும்" என்று பதிலிறுத்தான் ஐஸக். பிறகு, குறையை எப்படி நிவர்த்திப்பது என்பதை யோசிப்பதில் முனைந்தான்.

ஐஸக் மிக எளிதாக மனிதனின் சிற்றுரு ஒன்றை சிருஷ்டித்திருக்க முடியும். ஆனால் அது இடம் விட்டுப் பெயர்ந்து, யந்திரக்காரனுடைய வேலைகளை யெல்லாம் செய்ய முடியாதே!

காப்டன் லெமுவேல் கலிவர் (Captain Lemuel Gulliver) லிலிபுட் தீவை (Island of Lilliput) இன்னும் கண்டு பிடிக்காததைப் போன்று, ஐஸக்கின் 'மில்' லிற்குப் பொருத்தமான குட்டி மனிதர்கள் உலகில் இருந்திருக்கிறார்கள் என்பது அவனுக்குத் தெரியாது. தற்செயலாக கூட்டிற்குள் அப்பொழுதுதான் அகப்பட்டுக் கொண்ட எலியை யந்திரக்காரனாக அமர்த்தினான். வேறு ஒரு ஆளும் கிடைக்காததினால் மிஸ்டர் எலியாரே அந்த

உத்தியோகத்தில் அமர்த்தப் பட்டார். அப்புது உத்தியோகஸ்தர் தன் கருப்புக் 'கோட்'டுடன் மிகவும் கண்ணியமாகத் தோற்றினார். ஆனால் அந்த 'ஆள்' நாணயமாக இருப்பதாகத் தெரியவில்லை. சில சமயம் அரைக்கக் கொடுத்த தானியத்தில் ஒரு பகுதியைக் களவாடுகிறார் என்று சம்சயப்பட வேண்டி வந்தது.

ஐஸக்கிற்கு வயதான பின், காற்றாடி யந்திரம் போன்ற பொம்மைகளைச் செய்து கொண்டிருப்பதை விட, இன்னும் அதி முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்களை மனதுட் கொண்டிருந்தான் எனத் தோன்றியது. தனிமையாக இருக்கையில் அவன் நாள் முழுதும் சிந்தனையில் ஆழ்ந்தோ, கணித சாஸ்திரம் அல்லது பொருள்களின் சாஸ்திரம் படித்துக் கொண்டோ இருப்பான். இரவு நேரத்தில், மிகுந்த ஆவலுடன் நட்சத்திரக் கணங்களை நோக்கிக் கொண்டு, அவைகளும் நம்முடையதைப் போல் உலகங்கள் தானா, பூமியிலிருந்து அவை எவ்வளவு தொலையிலுள்ளன, எந்த சக்தி அவற்றைத் தம கதியில் செல்லும்படி செய்கின்றது என்பவற்றை எண்ணி ஆச்சர்யம் அடைவான். ஒருகால் அவனுக்குத் தன் இளம் பருவத்திலேயே பிற்காலத்தில் இவ்விதமான எல்லா கேள்விகட்கும விடை யளிக்க முடியும் என்ற முன் எண்ணம் தோன்றி யிருக்க வேண்டும்.

ஐஸக்கிற்கு பதினான்கு வயதாயிருக்கும் போது, அவனுடைய தாயின் இரண்டாவது கணவனும் இறந்து போனதால், அவள் தன் மகன் பள்ளியை விட்டு விலகி, வூல்ஸ் தோர்ப்பில் தனக்கு விவசாயத்தில் உதவி புரியட்டும் என விரும்பினாள். இரண்டொரு வருஷங்களாக ஐஸக் தன் கவனத்தை விவசாயத்தில் திருப்ப முயன்றான். ஆனால் அவன் மனம் ஒரு பெரிய பண்டிதனாவதில் லயித்திருந்தது. அதனால் அவனுடைய அன்னை அவனைப் பள்ளிக் கனுப்பினாள். பின்னாடி மேற் படிப்புக்காக கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலைக்கு அனுப்பி வைத்தாள்.

இதுவரை ஐஸக் நியூட்னின் குழந்தைப் பருவத்தைப் பற்றிய குறிப்புகளை யெல்லாம் கூறி முடிக்கப்பட்டது. ஐஸக் வயது வந்த மனிதனாகி ஆனபின் ஏராளமாகக் கண்டு பிடித்தவற்றை யெல்லாம் குறிப்பிட்டால் இக் கதை வெகு நீளமானதாகி விடும். அவன் தான் ஒளியின் இயற்கையை முதன் முதலில் கண்டுபிடித்தவன். ஏனெனில் அவனுக்கு முன் வாழ்ந்தவர்களில் ஒருவருக்காவது சூரிய ஒளி எதெது சேர்ந்து ஆக்கப் பட்டுள்ளது என்பதைக் கூற முடியவில்லை.

ஒரு நாள் ஐஸக் வீட்டுத் தோட்டத்தில் படுத்திருக்கையில் ஒரு ஆப்பில் பழம் அவன் தலைக்கு மேல் விழுந்து, அவனை வான்த்துக் கோளங்களைத் தம் கதியில் செல்லும்படி செய்கின்ற ஆகர்ஷண சக்தியை (Force of Gravitation) கண்டு பிடிக்க வழிகாட்டியது என்ற செய்தி உங்களுக்கு நினைவிருக்கலாம். ஒரு தரம் அவனுக்கு இந்த எண்ணம் உதித்த பின் கிரகங்கள் வானத்

தில் செலுத்தப்படுவது பற்றிய தத்துவங்களை அறியும் வரை தன் மனதிற்கு ஓய்வென்பதை கொடுக்கவில்லை. இந்த ஆராய்ச்சிகளை அந்த விண் மீன்களுக்கே சென்று அவற்றைத் தம் கதியில் செல்லும்படி வான வீதியில் செலுத்தியவன் போல முழுத்திறனுடன் செய்தான். இவ்வித ஆய்ச்சிகளை நடத்துகையில் இரவு நேரங்களில் ஒரு உயரமான கோபுரத்தில் இருந்து கொண்டு வானத்துக் கோளங்களை ஒரு தொலைநோக்கி (Telescope) மூலம் நோக்கிக் கொண்டிருப்பது வழக்கம். அவனுடைய மனம் இவ்வுலகத்துப் பொருள்களை விட்டு மேலான இடத்திற்கு ஏற்றப்பட்டிருந்தது. உண்மையில் ஐஸக் தன் வாழ்க்கையின் பெரும் பகுதியை பல்லாயிரக் கணக்கான இலட்சக் கணக்கான மைல்கள் தொலைவில் உள்ள உலகங்களில் செலவழித்தான் என்றே கூறலாம். ஏனென்றால் எவ்விடத்தில் நம் எண்ணங்களும் இதயமும் லயித்துள்ளதோ அவ்விடத்தில் தான் நம்முடைய உண்மையான வாழ்வு இருக்கிறது.

நியூடனையும் அவனுடைய டயமண்ட் என்ற நாயையும் பற்றிய கதையை நீங்கள் எப்பொழுதாவது கேட்டிருக்கிறீர்களா?

இருபது வருடங்களுக்கு மேலாக ஒளியின் தத்துவத்தைப் பற்றிய ஆராய்ச்சியில் மிகுதியாய் உழைத்தான். தன்னுடைய ஐம்பதாவது வயதில் ஒரு நாள் நெருப்புக் கருகில் டயமண்டை வீட்டில் விட்டு விட்டு அறையினின்றும் நீங்கி வெளிச்சென்றான். இருபது வருஷங்களாக் நியூடன் சிரமப்பட்டுக் கண்டு பிடித்த உண்மைகளடங்கிய ஒரு கத்தை கையெழுத்துப் பிரதிகளை மேஜை மீது வைத்திருந்தான். தன் எஜமானன் சென்ற பின் டயமண்ட் எழுந்து மேஜையின் மேல் குதித்து, எரிந்து கொண்டிருந்த மெழுகுவர்த்தியைத் தட்டி விட்டது. காகிதக் குவியலில் தீப்பற்றியது.

காகித மெல்லாம் எரிந்து முடிந்த பின் வந்த நியூடன், கதவைத் திறந்து தன்னுடைய இருபது வருட கடின உழைப்பு முழுவதும் பிடி சாம்பலாகக் கிடந்ததைக் கண்ணுற்றான். அவ்வளவு தீமைக்கும் ஆளாகிய டயமண்ட் அமைதியாய் நின்று கொண்டிருந்தது. வேறு யாருமாயிருந்தால் அந்த நாய்க்கு உடனே கொலைத்தண்டனை விதித்திருப்பார்கள். ஆனால் நியூடன் இதயத்தில் துயரம் நிறைந்திருந்த போதிலும் என்றும் வழக்கம் போல ரொம்ப பட்சத்துடன் அதன் தலையில் தட்டிக் கொடுத்தான்.

"டயமண்ட்! டயமண்ட்! உன் தப்பிதத்தை நீ சிறிதும் உணரவில்லை!" என்று ஓலமிட்டான்.

இந்த சம்பவம் சில நாட்களுக்குப் பின்னால் அவனுடைய தேக நலத்தையும், ஆர்வத்தையும் பாதித்தது. இருந்தபோதிலும் அவன் தீங்கிழைத்த நாயை நடத்திய விதத்திலிருந்தே அவனுடைய இனிய குணத்தின் தன்மை விளங்கும்.

நியூட்ன் இறுதியில் மிகப் பெரும் புகழ் பெற்று வயது முதிர்ந்த கிழவனாய் வாழ்ந்தான். அவன் ஒரு பார்லிமெண்ட் அங்கத்தினனானான், மன்னரிடமிருந்து நைட்ஹூட் (Knighthood) என்ற பட்டமும் பெற்றான்.

எனினும் அவன் உலகத்துப் புகழையும், மரியாதையையும் பெரிதாகக் கருதவில்லை. தன் அறிவின் விசாலத்தைப் பற்றிப் பெருமையோ அல்லது கர்வமோ கொள்ளவில்லை. அவன் அடைந்திருந்த ஞானம், இன்னும் கற்க வேண்டியவற்றை ஒப்பிட்டுக் காண்பித்து அவன் எவ்வளவு கொஞ்சம் கற்றுள்ளான் என்பதை உணரச் செய்தது.

"உண்மை என்னும் கரையற்ற கடல் என் முன் இன்னும் ஆராயப்படாமல் இருக்கும் போது நான் கடற்கரையில் விளையாடிக் கொண்டு அங்கு மிங்கும் கிடக்கின்ற ஒரு அபூர்வ சங்கு அல்லது அழகிய கூழாங்கல்லைப் பொறுக்கும் சிறு குழந்தையைப் போல் உள்ளேன்" என்று ஒரு சமயம் தன்னைப் பற்றிக் கூறினானாம்.

இறுதியில் 1727-ம் ஆண்டு தன்னுடைய எண்பத்தைந்தாவது வயதில் ஸர் ஐஸக் நியூட்ன் இறந்தான். இல்லை; இந்தப் புவி வாழ்வை மட்டும் தான் நீத்தான்.

அவனுடைய ஆவி அழியும் உடலில் தங்கியிருந்த பொழுதினை விட, அதிக ஆர்வத்துடனும், மிகுந்த வெற்றியுடனும் இன்னும் முடிவற்ற ஞானத்தையும், சிருஷ்டி கர்த்தாவின் சிருஷ்டி அபூர்வங்களையும் கண்டு பிடித்துக் கொண்டு தான் உள்ளான் என்பதை நாம் தாராளமாக நம்பலாம். நள்ளிரவில் பிரகாசிக்கும் விண் மீன்களின் ஒளியினாலாய எழுத்துக்களால் கட்டப்பட்டுள்ள அவன் பெயரைப் போன்று, என்றென்றும் நீடித்திருக்கும்படியான புகழைத் தன் பின்னே விட்டுச் சென்றுள்ளான்.

(கு. ராஜாராம், மொழிபெயர்த்தது.)

# சில அனுபவ விநோதங்கள்

(எரும்பூர்—குருஸாமி ஐயர்)



**கடனாளி யார்?** எந்த குடும்பஸ்தனும் கடன் சுமையால் பாதிக்கப் படாமலில்லை. எல்லோருடைய வாழ்க்கையும் நாணய செலாவணியால்தான் சூழப்பட் டிருக்கிறது. ஒருவரை நாம் அணுகாத வரையில், அதாவது அவர்கள் யோக க்ஷேமங்களை தெரிந்து கொள்ளாதவரையில், "அவருக் கென்னப்பா, சுக வாசி, நிறைய சொத்து இருக்கிறது. பணமுள்ளவனுக்கு பத்தும் நடக்கும்," என்று சுலபமாய் சொல்லி விடுகிறோம். பணமுள்ளவனுக்கு அவன் தன் பணத்தை காப்பாற்றுவதற்கு எடுத்துக் கொள்ளும் சிரமத்தால் கஷ்டம். கடனாளிக்கு, அவன் தன் கடன்களைத் தீர்த்துக்கொள்ள எடுத்துக் கொள்ளும் சிரமத்தால் கஷ்டம். நாணயம் என்பது உலகத்தில் எல்லோரிடமும் நாணயமாகத் தான் பழகுகிறது. ஆனால், மக்கள் அதனை நாணயமாக நினைத்து, 'உடலுக்கு ரத்தம்; நாட்டுக்கு நாணயம்,' என்றவாறு அதனிடம் நாணயமாய் நடந்து கொள்ள வேண்டும். ஒரு மனிதனிடத்தில் நாணய மிருக்கிறதென்றால் அதுவே அவன் வாழ்க்கையை பரிசுத்தமானதாக்கி விடுகிறது. இந்த நாணயம் எனும் சொல், ஒருவனுடைய வாழ்க்கையில் சகல விதத்திலும் நிழல் போலத் தொடர்கிறது. சொல்லில் நாணயம், செயலில் நாணயம் வேண்டும். இதல்லாமல், கடன் வாங்கும்போது சொல்லும் உடன்படிக்கைகளை பறக்கவிட்டு, பணம் கேட்கும்போது அடிக்க வருவதும், வாங்குகிற வழியில் வாங்கிக் கொள்ளடா என்பதும், மிகவும் பொருத்தமற்றதும், நாணயமற்றதுமாகும். சிலர் சால்ஜாப்பு சொல்வார்கள். மற்றும் சிலர், யாரையாவது குறிப்பிட்டு 'அவனைக் கேட்டிருக்கிறேன். வாங்கித் தருகிறேன்' என்பர். அந்த குறிப்பிட்ட பேர்வழியைக் கேட்டால், அவன் தனக்கு மணியார்டர் வரப் போகிறதென்பான். மணியார்டர் செய்ய வேண்டியவனை சந்திக்க நேர்ந்து கேட்டாலோ பாங்கியில் ஒரு கடனுக்கு மனு போட்டிருப்பதாயும் கிடைத்ததும் அனுப்பப் போவதாகவும் தெரிவிப்பான். பாங்கியில் விசாரித்தாலோ, அவர்கள் மற்றொரு பாங்கியின் மீது கோர்ட்டில் வியாஜ்யம் தொடர்ந்திருப்பதாயும், அது சீக்கிரத்தில் சாதகமாகி, அதனால் ஒரு பெருந் தொகை வருமென்று எதிர் பார்ப்பதாயும், அதில்தான் கொடுக்க வேண்டுமெனவும் சொல்வார்கள்.. இப்படியே ஒவ்வொருவரும், அவரவருக்குத் தகுந்த கஷ்டங்களையும், கடன்களையும், உடன்பிறப்பாக வைத்துக் கொண்டுதானிருக்கிறார்கள். எனவே முதலாளி யார்? கடனாளி யார்?

## 2

**"கஷ்டத்திற்காக கஷ்டமடைவதா ?"** ஏதாவதொரு கஷ்டம் வந்து விட்டால், 'ஐயோ! இப்படி வந்து விட்டதே' யென்று ஒரேயடியாக் ஏங்கித் தவிப்பது முட்டாள்தனம். மருந்து கசக்கும் என்பது நமக்கு நன்ருகத் தெரிந்த விஷயம். இருந்தாலும், அதனை உட்கொள்வதால்தான் நாம் நன்மை யடையவேண்டு மென்பதும் அறிந்ததே. ஆனல் உடனே மருந்தைச் சாப்பிடுகிறேமா? இல்லை. வியாதிக்கு பத்தியம் வேண்டும். பத்தியத்தைக் கேட்ட வுடனேயே இந்தப் பத்தியமிருந்து மருந்து சாப்பிடுவதைவிட, இறப்பது மேல் என்று சிலர் சொல்லிவிடுகிறேம். சில சமயங்களில் மருந்து சாப்பிட்டு விட்டதாகக்கூட வைத்தியனிடம் பொய் சொல்லுகிறேம். இதனுல் வியாதிக்குக் கொம்மாளம். நமக்குத் திண்டாட்டம் அல்லவா? ஆகையால் ஒரு கஷ்டத்தை யனுபவிக்க நோந்தால், அதை அனுபவிப்பதோ டல்லாமல், 'அந்தக் கஷ்டத்தை எப்படி யனுபவிப்பது? அந்தக் கஷ்டத்தால் என்னென்ன நேரிடுமோ?' என்றெல்லாம் நினைத்து சதா ஏங்கி முன்னும் பின்னுமாக ஒருவழியும் போகாமல் வருந்துவதே, கஷ்டத்தை மேலும் பெருக்கிக் கொள்வதும், அசலுக்கு வட்டி சேர்த்துக் கொடுப்பது மாகும்.

அப்படியின்றி, 'விதியை மதியால் வெல்லலாம்,' என்றபடி கஷ்டங்களை சந்தோஷத்துடனும், புத்திசாலித் தனத்துடனும், அனுபவித்து, வழியனுப்பி விடுவதே மேலாகும். "கஷ்ட பட்ட வாரிகி சுகமு கத்து" என்பது ஒரு தெலுங்கு பழமொழி. ஆகவே கஷ்டப் பட்டவர்கள் சுகமடைவார்கள் என்பதை நம்ப வேண்டும்.

## 3

**ஏழையின் குணமும், பணக்காரனின் பணமும்.** பணம் படைத்தவனைப் பணக்கார னென்றும். அல்லாதவனை ஏழை என்றும் கூறுகிறேம். பணக்காரனிடத்தில் குணமும் இருந்து விட்டால் அவன் புகழ் நன்கு விளங்கும். அல்லாவிட்டால், அவன் தன் வரையில்கூட அந்தப் பணத்தை உபயோகம் செய்து கொள்ளத் தெரியாதனுகி கஷ்டமடைகிருன். ஆகவே, குணமும் பணமும் ஓரிடத்தி லிருந்தால் எல்லோருக்கும் நன்மையுண்டாகும். ஏழையிடத்தில் பணமில்லை யென்பது உண்மை. ஆனல் குணமும் இராதென்று நிச்சயமாய் கூறமுடியாது. ஏழை; தான் குணவானுயிருந்து பணக்காரனுக வேண்டுமென்பதற்காகவேனும், நல்ல குணங்களோடு காணப்படுவான். ஆகவே, ஏழையிடத்து குணமும், பணக்காரனிடத்து பணமும் விசேஷமாகக் காணப்படுமெனக் கொள்ளலாம்.

ஏழைகளால் பணக்காரர்களுக்கு காரியம் ஆகவேண்டுமானல், சிலர், அவர்களை தெய்வத்தினும் மேலாக மதித்துப் பேச

வர்கள். "தெய்வம் மனுஷ்ய ரூபேண," என்கிறார்களே, அதுவே இது என்பார்கள். உன்னை ஒருபோதும் மறவேன். உனக்கு எது வேண்டுமானாலும் தருகிறேன். நீதானடா இந்த சமயம் எனக்கு பெத்த பிள்ளை, எஜமான்." என்றெல்லாம் சொல்லி உற்சாகப் படுத்துவார்கள். இவைகளால் எளியோன் உற்சாக மடையப் பட்டு, தன் உயிரையும் தியாகம் செய்யத் துணிந்து, காரியத்தை முடித்துத் தருகிறான். காரியம் முடித்துக் கொண்டவன் அதனால் ஆய பலனை யடையும்போது மனம் ரொம்பவும் குதூஹலமடை கிறான். காரியத்தை முடித்துக் கொடுத்தவனோ, தனக்கு ஒரு பணக்காரனின் சிநேகம் கிடைத்து விட்டதாகவும், பிரதிபலனை உத்தேசிக்காம லிருந்தால் இன்னும் தன் கௌரவம் உயர்ந்த தாகுமென்றும் கருதி தன் ஏழ்மைக்கும் சமாதானம் கூறிக் கொள்கிறான்.

காரியம் ஆனதும், அதற்குக் காரணமாயிருந்தவனை மறந்து விடுகிறார்கள். "ஹூம்! பிரமாதம். இவனில்லாவிட்டால் இக் காரியம் பூர்த்தியாகாதாக்கும். ஏனென்றால் இவன்தானே பிரம்மா? போயேன். அவனவன் அதிருஷ்டப்படி தானப்பா எல்லாம் நடக்கும். இந்தக் காரியம் பூர்த்தியாகா விட்டால் இவன் தன் பெய்ரை சொல்லிக் கொள்வானா? மரம் வைத்தவனல்லவா தண் ணீர் ஊற்றுகிறான்," என்றெல்லாம் வேதாந்தம் பேசுவார்கள். மேலும், ஒரு எளியோனால் தனக்குக் காரியம் முடிந்ததாக சொல் லிக் கொள்வதில் வெட்கம். ஆகவே, தன் விலாசத்தைப் போட் டுக் கொள்கிறார்கள்.

ஆனால், ஏழைக்குப் பணக்காரன் உதவி வேண்டி யிருந்தால் பல தட்வைகள் அவனை வேண்ட வேண்டும். அப்படி உதவி கிடைத்து விட்டாலோ அவன் தன்னை நாளுக்கு நாள் அதிகம் மதிக்க வேண்டுமென்று எண்ணுகிறான். இதை உணர்ந்த சுய மதிப்புள்ள ஏழை பணக்காரனது பெருந்தன்மையில்லா குணத் திற்காக வருத்த மடைவதுடன், "இந்தக் காரியத்தை ஏனடா இந்த அல்பன் மூலம் முடித்துக் கொண்டோம். இதைவிட இக் காரியம் நின்றிருந்தால் கூட இவ்வளவு வருத்தம் நமக்கு ஏற் பட்டாதே! இந்த உபகாரத்தைப் பெற்றதற்காக இவனை அளவு கடந்தல்லவா வணங்கவேண்டி யிருக்கிறது," என்றும் வருந்து கிறான்.

பணக்காரர்கள் ஏழைகளுக்கு உதவுவதை ஓர் உபகாரமாக வும், கடமையாகவும் நினைக்க வேண்டும். அவர்களிடத்தில் பிரதி பலனை எதிர்பார்ப்பது பெருந்தன்மையும், அழகுமாகாது. அதேபோல் ஏழையும் பணக்காரன் தனக்கு உதவுவதை அது தனக் களிக்கப்பட்ட கௌரவமெனவும், உபகாரமெனவும் மதித்து, அந்த உதவியை மறவாத வகையில் அவர்களுக்கு நன்றி செலுத் தத் தான் கடமைப் பட்டிருப்பதை நன்கு தெரிவிக்க வேண்டும்.

---

# நக்ஷத்திர உலகம்

("ஷா")



நாம் இரவில் காணும் ஒவ்வொரு நக்ஷத்திரமும் ஓர் பிரம்மாண்டமான கோளம். அவை ஒவ்வொன்றும் சூரிய சந்திரன் ஒவ்வொன்றைக் காட்டிலும் பன் மடங்கு பெரியவை. அவைகள் ஒவ்வொன்றிலும் நமது இப் பூவுலகத்தைப் போலவே அனந்தகோடி ஜீவராசிகளும் மனுஷ சஞ்சாரமும், மலை வளங்களும் ஆறு அருவிகளு முண்டு. ஆனால் இங்கு நடக்கும் சம்பவங்களைப்போல் அங்கு நடப்பதில்லை. நான் இப்போது சொல்லப் போகும் கதை நம் கண் காணாத வெகு தூரத்திற் கப்பாலுள்ள இத்தகைய ஓர் நக்ஷத்திர உலகைப் பற்றியே தான்.

அவ் வுலகில் ஓர் யுவனும் யுவதியு மிருந்தனர். அவ் விருவரும் இணைபிரியாத நண்பரா யிருந்தனர். இம்மாதிரியான சம்பவங்கள் சிற்சில சமயங்களில் இவ் வுலகத்திலுங்கூட நிகழ்கின்றன. ஆனால் இங்கு காணாத சில சம்பவங்கள் அங்கு நடப்பதுண்டு.

ஓர் அடர்ந்த வனம். நெருங்கிப் பெருகி ஓங்கி உயர்ந்த மரங்கள். சூரியன் கிரணங்களும் ஊடுருவி செல்ல முடியாத அடர்ந்து இருண்ட இடத்தில் ஓர் சமாதி. பகல் முழுவதும் நிசப்தம். இரவில் நக்ஷத்திரங்கள் ஜ்வலித்தன. சந்திரனின் ஒள்ளிய கிரணங்கள் அவ் விருக்ஷங்களின் மீது படர்ந்து கவர்ந்து கொண்டன. கீழே சந்தடியில்லை. எவரேனும் தனிமையாய் வந்து இந்த சமாதியின் படிகளின் மீது இரத்த துளிகள் சிந்தும்படியாக தங்கள் மார்பை திறந்து காயப்படுத்திக் கொள்வரேல், அவர் வணங்கி நின்று கோரிய வரம் அருளப்படும். நான் முன் கூறியதைப்போல் இது நட்சத்திர உலக மாகையால் நம் முலகில் நடைபெறாத இவ் விந்தையான சம்பவங்கள் அங்கே நிகழ்கின்றன.

மேற் கூறப்பட்ட அந்த யுவனும் யுவதியும் பல நாளாக் ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாம லிருந்து வந்தனர். ஒருநா ளிரவு. சந்திரன் ஒளிவிட்டுப் பிரகாசித்தான். மரங்களின் இலைகள் அவ் வெண்ணிலாவில் துலங்கின சமுத்திர அலைகள் வெள்ளிக் கம்பிகளைப்போல் படர்ந்தன. தனிமையாக அப் பெண்ணணங்கு வனத்தில் நடந்து செல்கின்றாள். வன முழுவதும் ஒரே நிசப்தம். அவள் மிருதுவான பாதங்களி னடியில் உதிர்ந்து கிடக்கும சருகுகளின் மீது, மரக்கிளைகள் இங்கு மங்கும் ஊசலாடுகையில் அவைகளி னிடையே ஊடுருவி வந்த சந்திர கிரகணங்களின் ஒளி இடை இடையே பிரகாசித்தது. அவள் தலைக்குமேல் பின்னிப் பிணைந்த மரக்கிளைகள் உயர்ந்து போகப் போக இருண்டு கிடந்தன. மெது

வர்க் ஸமர்தியை நெருங்கினாள் பூங்கோதை. முழங்கால் படியிட்டு உருகி பிரார்த்தித்தாள். பதில் இல்லை. உடனே தன தழகிய பட்டு போன்ற மார்பின் மீதுள்ள ஆடையை தனது மெல்லிய கரங்களால் விலக்கினாள். இருபக்கமும் கூரிய ஓர் கல்லையெடுத்து வெண்பட்டையொத்த தன் மார்பைக் கீறினாள். அடுத்த நிமிடம் சிவந்த இரத்தத் துளிகள் அம்மார்பின் வழியே மெதுவாக வழிந்தோடி அச் சமாதியின் படிகளின்மீது சொட்டின. உடனே "நீ விரும்புவது யாது?" என்றொரு குரல் அவள் காதில் ஒளித்தது. "நான் இடைவிடாது நேசித்து அன்புடன் போற்றும் ஓர் மனிதனுளன். உலகில் மற்றெல்லா பொருள்களைக் காட்டிலும் அவனை மேலாக என் உயிருக்குயிராய் நேசிக்கிறேன். அவனுக்கு சிறந்த ஆசீர்வாதத்தை கொடுக்கும்படியாக வேண்டுகிறேன்" என்றாள் மெல்லியல்.

"என்ன வரம்?" என்று அக்குரல் வினவியது.

"அது எனக்குத் தெரியாது, எது அவனுக்கு நன்மையை யளிக்குமோ அவ் வரத்தை அருளும்படி பிரார்த்திக்கிறேன்" என்றாள் பெண்மணி.

"உனது வரம் அருளப்பட்டது. அதை அவன் அடைவான்" என்று மறுமொழி அவள் காதில் பின்னும் ஒலித்தது.

திறந்த தனது மார்பை தன தாடையால் இறுக மூடிக்கொண்டு காட்டினின்றும் ஓடோடியும் சென்றாள் பூங்குழலாள். இருண்ட வனத்தினின்றும் துல்லிய மாருதம் வீசும் ஒள்ளிய மதியின் வெளிச்சத்திற் கேகினாள். சமுத்திரக்கரையின் மணல் அக்கிரணங்களி னொளியில் பொன்னொளியாக மின்னிப் பிரகாசித்தது. கரை பக்கமாய் ஓடினாள் மாது. பிறகு திடீரென்று அசைவற்று நின்றாள். ஏதோ ஒரு வஸ்து. ஆம்; தூரத்தில் சமுத்திரத்தில் அது ஊர்ந்து செல்வதைக் கண்டாள். பின்னும் உற்று நோக்கினாள். வெகு தூரத்தில் தண்ணீரின் மீது விரைவாய் தவழ்ந்து செல்லும் ஓர் படகு அது. அதோ அதில் ஓர் மனித உருவம் நின்றுகொண்டிருக்கிறது. அந்த உருவத்தின் முகம் மாத்திரம் சரியாக தெரியவில்லை. எனினும் அது யாருடைய உருவம் என்பதை நன்றாக தெரிந்துகொண்டாள் பாவை. படகோ விரைந்து செல்கின்றது. படகோட்டி யின்றி அது தானே விரைந்து செல்வது போல் தோன்றுகிறது. கரையிலிருந்து படகு தூரம் போகப் போக அந் நிலா வெளிச்சத்தில் அது அவள் கண்களுக்கு துல்லியமாய்ப் புலப்படவில்லை. அதோ படகின் துடுப்பின் பக்கமாம் ஓர் உருவம் உட்கார்ந்து கொண்டிருக்கிறது. சமுத்திர அலைகளின் மீது மேலும் கீழுமாக வளைந்து வளைந்து அதி விரைவாய் செல்கின்றது அப் படகு. வெகுதூரம் சென்றுவிட்டது. அதோ மறைந்து விட்டது. ஓடோடியும் செல்கின்றாள்

மட்ந்தை. ஆனால் பட்கையோ நெருங்கினபாடில்லை. கதறினாள், பதறினாள், பலனில்லை. பட்கு கண்காணாத தூரத்தில் மறைந்து விட்டது.

அவள் அணிந்திருந்த ஆடைகள் காற்றில் பட்டு படபட வென்றடித்தன. துவண்ட தன்னிரு கைகளையும் பரிதாபகரமாய் நீட்டி ஏந்துகின்றாள். அவிழ்ந்து தொங்கும் இருண்ட அழகிய அவள் கூந்தலின் மீது நிலா வெளிச்சம் பிரகாசித்தது.

"என்ன?" என்று பக்கத்தில் மெதுவான ஒரு குரல் அவளுக்கு கேட்கிறது. "என் மார்பின் இரத்தத்தினால், நான் நேசிக்கும் ஆடவனுக்கு ஓர் உயர்ந்த வரத்தைக் கொண்டு வந்தேன். அவனோ அதை அடையுமுன் என்னை விட்டு விலகிப் போய்விட்டான்" என்று பரிதபித்தாள்.

"உன் பிரார்த்தனை கேட்கப்பட்டது. அது அவனுக்கு அருளவும் பட்டது" என்று பதில் குரல் கேட்டது.

"அது எவ்வாறு?" என்றலறினாள் பெண்மணி.

"அது அவன் உன்னை விட்டுப் பிரிந்து போக வேண்டுமென்பதே" என்று மறுமொழி வந்தது.

தூரத்தில் நிலா வெளிச்சத்தில் கண்காணாத தொலைவில் அப் பட்கு மறைந்தது.

"இப்போது நீ திருப்தி யடைந்தாயா!" என்றது மறுபடியும் அக்குரல்.

"ஆம்; திருப்தி யடைந்தேன்" என்றாள் அவள்.

சமுத்திர அலைகள் திரண்டு வந்து, அவள் பாதங்களினடியில், கரையின் மீது விரைவாய் ஒன்றன்பின் ஒன்றாய் மோதிச் சென்றன.

(ஓர் ஆங்கிலக் கதையை தழுவி எழுதியது.)

---

## ஆராய்ச்சி!

நண்பன்:—என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?

ஆராய்ச்சியாளர்:—இந்த உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களையும் கரைத்துவிடக் கூடிய திரவம் ஒன்றைக் கண்டுபிடிக்கிறேன்.

நண்பன்:—அப்படியானால் அந்த திரவத்தை எந்த வஸ்துவில் ஊற்றி வைக்கப்போகிறீர்கள்?

ஆராய்ச்சியாளர்:—இப்பொழுது அதைப்பற்றித் தான் யோசனை செய்து கொண்டிருக்கிறேன்.

—M. K. சவுண்டப்பன்.

# பூதப் பாண்டியன்

(கீ. வை. சிவசுப்பிரமணியன் பீ. ஏ.)



பூதப்பாண்டியன் என்பான் பாண்டிய மன்னர்களுள் ஒருவன்; வீரத்தாலும் கொடையாலும் சிறப்புப் பெற்றவன். படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் ஆறு அரண்களையும் குறைவின்றிக் கொண்டவன். பகையரசர்களைக் கொன்று அவர்களது நாடு முதலியவற்றைக் கைக்கொண்ட வெற்றிச் செல்வ முடையவன். எல்லா வளங்களும் சிறந்து வெற்றி மிடுக்கோடு வீற்றிருந்த அவனைப் பாணரும் விறலியரும் வந்து கண்டு பாடியும் ஆடியும் பரிசு பெற்றுச் சென்றனர். புலவர்களோ எக்காலத்தும் அவனைப் புடைசூழ்ந்து தம் தமிழ்ச் செய்யுளமிர்தத்தைச் சொரிந்து பல பரிசில்களை அவன் வழங்க வாங்கிச் செல்வர். அவர்கள் இன்புறுவது கண்டு தான் இன்புறுவான் அவன். தன் குடிகளது மனங் கோணாவாறு செங்கோலோச்சினமையின் அவர்கள் அவனது அடி தழுவி நின்றனர்.

இத்தகைச் சிறப்புடைய பூதப்பாண்டியன் ஒருநாள் பட்டத்தரசி, அமைச்சர், சேனாபதியர், ஒற்றர், புலவர், பெருங்குடி மக்கள் புடைசூழ கொலு வீற்றிருந்து நாட்டில் தம் மக்கள் வாழும் நிலையினை ஆராய்ந்து அளவளாவிக் கொண்டிருந்தான். நாட்டின் குடி மக்கள் அரசனின் கொற்றக் குடைக்கீழ் யாதொரு குறைவுமின்றி இன்ப வாழ்வு நடத்துவதைக் கூறி நன்றி செலுத்தினர். "மன்னன் உயிர்த்தே மலர் தலையுலகம்" என்பதை நன்குணர்ந்த தனது குடிகள் தன்பால் கொண்டிருக்கும் அன்பின் திறத்தால் பிணிக்கப்பட்டானாய் அவனது உள்ளத்தினின்றும் உவகை பீரிட்டெழுந்தது. அந்த உணர்ச்சியின் பயனாய் அவனது வாயினின்றும் ஒரு சூளுரை வெளிப்போந்தது. அதன் கருத்து வருமாறு.—

"குடிமக்காள்! எனது ஆட்சியில் உங்களுக்குப் பகைவரால் ஊன மேற்பட்ட காலத்து யான் உங்களைக் காக்கவேண்டிய கடமையை மறந்திலேன். அங்ஙனம் காவாது மடியினால் மனமுடைந்து வாளா இருப்பேனாயின் சிங்கம் போலக் கோபங்கொண்டு பல அரசர்கள் ஒன்று கூடி என்மேல் படையெடுத்து வரினும் அவர்களைப் பெரும் போரில் அலமறப் பொருது தேரும் பிறவும் முறிந்தோடும்படிச் செய்யேனாயின் இதோ என் பக்கலில் வீற்றிருக்கும் என் இன்னுயிர்வாழ்க்கைத் துணைவியைப் பிரிவேனாக. அறநிலை தவறாது நடைபெற்று வரும் அவைக்களத்து அறத்தின் திறமறியா னொருவனைத் தலைவனாக ஏற்படுத்தி அறக் கொற்றத்தை மறக்கொற்றமாகச் செய்தேனாகுக. இதோ என்னெதிரே அமர்ந்திருக்கும் எனது இன்னுயிர் நண்பர்களாகிய மையல் என்னும்

ஊர்த்தலைவனாகிய மாவன், எயிலென்னும் ஊரின் கண்ணுள்ள ஆந்தை, அந்துவஞ்சாத்தன், ஆதனழிசி, இயக்கன் என்பவரின் நட்பினை இழந்து பொய்யாக் குலக்கொடியாம் வையையால் வளம் பெறும் மதுரைத் தலைநகரிலிருந்து தென்தமிழ் நாடாளும் பேற்றினை இழந்து பிறர் வன்புலங் காக்கும் குடியில் சென்று பிறப்பேனாக" என்று சூளுரைத்தனன். உள்த்தெழு உவகையால் உணர்ச்சி ததும்பக் கூறிய இச் சொற்களே புறநானூறில் 71-வது பாட்டாக மிளிர்கின்றது. அச் செய்யுளைக் காண்போம்.

மடங்கலிற் சினைஇ மடங்கா வுள்ளத்
தடங்காத் தானை வேந்த ருடங்கியைந்
தென்னொடு பொருது மென்ப வவரை
யாரம ரலறத் தாக்கித் தேரோ
டவர்ப்புறங் காணே னாயிற் சிறந்த
பேரம ருண்க ணிவளினும் பிரிக.
வறநிலை திரியா வன்பி னவையத்துத்
திறனி லொருவனை நாட்டி முறை திரிந்து
மெலிகோல் செய்தே னாகுக மலிபுகழ்
வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்
பொய்யா யாணர் மையற் கோமான்
மாவனு மன்னெயி லாந்தையு முரைசால்
அந்துவஞ் சாத்தனு மாத னழிசியும்
வெஞ்சின வியக்கனு முளப்படப் பிறருங்
கண்போ னண்பிற் கேளிரொடு கலந்த
வின்களி மகிழ்நகை யிழுக்கியா னொன்றோ
மன்பதை காக்கு நீள்குடிச் சிறந்த
தென்புலங் காவலி னொரீஇப் பிறர்
வன்புலங் காவலின் மாறியான் பிறக்கே.

இனி இச் செய்யுட் கருத்தின் நயத்தை ஒரு சிறிது நோக்குவோம். உருவும் திருவும் ஆற்றலும் முதலாயவற்றான் மகிழ்ந்து, தற்காத்தலினும் பகைவரை யழித்தல் முதலிய காரியங்களிலும் சோர்தலின்றி இருத்தல் வேண்டும் என்ற நியதியை நன்குணர்ந்தவன் பூதப் பாண்டியன். "புகழ்ந்தவை போற்றிச் செயல் வேண்டும், செய்யா திகழ்ந்தார்க்கு எழுமையுமில்லை" யாகலின், செயத்தக்க காரியத்தை மடியின்றி முடித்து வெற்றி பெறும் பண்புடையான். உறுபசியும், ஓவாப் பிணியும் செறு பகையும் சேராது இயல்வ தன்றோ நாடு! ஆதலின் பூதப் பாண்டியனது மனம் தனது நாடு நாட்டாகத் திகழ வேண்டுமென்ற ஒரே குறிக்கோளை நாடி நின்றது; தன் நாட்டின்மேற் படையெடுத்து வந்து தன் குடிகளுக்கு ஊறிழைக்க முயலும் பகைவனை புறமுதுகிட்டோடச்

செய்யும் படை மாட்சியினைப் பெற்றிருந்தான். அதனால்தான் "பகைவரை முறியடித்து ஓடச் செய்யாமவிருப்பேனாயின் எனது அன்பினுக்குரிய மனைவியை யான் பிரிவேனாக" எனத் தன் தவறுக்கு தான் அடையக்கூடிய தண்டனையைத் தானே அளவிட்டுரைக்கின்றான். தம் ஆட்சியின் கீழுள்ள வழக்குரை மன்றங்களில் ஒருபாற் கோடாது நீதியுரைக்க வல்ல சான்றோரைத் தவிர்ந்து, அப் பணிக்குரிய திறனற்ற ஒருவனை நியமித்து முறை வழுவி கொடுங்கோலாட்சி புரிந்தேனாகுக எனக் கூறியதால் அவனது நீதி முறை இத் தன்மைத் தென்பது ஊகித்துணர்தற்பாலது. அரசர்க்குரிய ஆறறங்களுள் ஒன்றாகிய நண்பர்களைப் பிரிந்தேனாகுக எனக் கூறித் தனக்கு இழுக்கலுடையுழி ஊன்றுகோலென இருந்து இடுக்கண் களைந்துவந்த நண்பர்களிடத்தும் குடிமக்களிடத்தும் தான் கொண்டிருந்த நீங்கா அன்பின் திறத்தினை வெளியிடுகிறான்.

இத்தகைய சூளுரை தமிழ்நாட்டு மன்னர் பலரால் கூறப்பட்டிருத்தல் சங்க நூல்கள் பலவற்றில் காணலாம். இதுதான் பண்டைத் தமிழரசர் ஒவ்வொருவர் உள்ளத்திலும் வேரூன்றிக் கிடக்கும் கொள்கையாகும். நாடாசை பிடித்து படையெடுத்துவரும் பகையரசனை முறியடிப்பதில் காட்டும் வீரமே நாட்டுப் பற்றாகும். அத்தகைய நாட்டுப் பற்றின் உறைப்பினால் பூதப்பாண்டியனது வாயினின்றும் வெளிப்போந்த சொற்களாகும் இவை. இத்தகைய அரசனைத் தம் தலைவனாக வாய்க்கப் பெற்றிருந்த பாண்டி நாட்டு மக்கட்கு உரித்தாம் குறையுமொன்றுண்டு கொல்?

இச் செய்யுளைப் படிக்குங்கால் இங்கிலாந்து தேச சரித்திரத்தில் பதின்மூன்றாம் நூற்றாண்டில் ஜான் என்னும் அரசன் காலத்தில் நடந்ததோர் நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. அதுதான் **"மாக்னு கார்ட்டா" (Magna Carta)** என்ற **"குடிமக்கள் நலவுரிமைப் பத்திரம்"** ஆகும். அரசர்க்குரிய பண்புகள் ஒரு சிறிதும் வாய்க்கப் பெறாதவன் ஜான் மன்னன். பெரியோரைத் துணைக் கோடலாகிய பண்பினைப் புறக்கணித்து அரசியல் அங்கத்தினரிடத்து நம்பிக்கை யற்றவனாய் ஆணவமுற்று களியாட்டங்களிற் களித்திருந்தான். அவனது ஆட்சித் திறங் கண்டு மக்கள் மனமுடைந்தனர். தங்கள் நலத்தினில் ஒரு சிறிதும் கருத்தில்லாத அவனது ஆட்சியில் மக்களுக்கு வெறுப்பு ஏற்பட்டது. கிளர்ச்சி செய்ய உறுதிகொண்டனர். நாட்டின் தலைவர்கள் சிலர் **"ரன்னிமேடு" (Runneymede)** என்ற இடத்தில் ஒன்று கூடினர்; ஜான் மன்னன் தலைமை தாங்கினான். பெருங்குடி மக்களனைவரும் ஒன்று சேர்ந்து தங்களது நலம் பெரிதும் பாதுகாக்கப் படவேண்டுமென்று அரசனுக்கு எடுத்துக் கூறி மேற்கூறிய நலவுரிமைப் பத்திரத்தைத் தயாரித்து அரசனைக் கட்டாயப் படுத்தி அதில் கையெழுத்திடுமாறு செய்தனர். அதில் அரசன் தன் குடிகளிடம் பெறுதற்குரிய இறையின் அளவு, அவன் குடிமக்கட்கு ஆற்றவேண்டிய

இன்றியமையாக் கடமைகள், மக்களின் சமயக்கோட்பாடுகள் பற்றிய உரிமைகள் முதலியன முறை வகுக்கப் பட்டன. இப்பத்திரமே அன்று தொட்டு இன்றுவரை ஆங்கிலேயரால் "மாக்ன கார்ட்டா" அல்லது "மகா சாசனம்" என்று போற்றப் பெற்று பொன்னே போல் காக்கப்பட்டு வருகின்றது.

பிறரொருவர் தூண்டுதலின்றியே, தம் மக்களிடத்துத் தான் கொண்டிருந்த அன்பின் காரணமாய் பூதப்பாண்டியனது நாவினின்றும் வெளிவந்த பொன் மொழிச் சாசனமே புறநானூற்று எழுபத் தோராவது 'செய்யுளாகும். இத்தகைய சூளுரையினைக் கூறுமாறு அவனை யாரும் வற்புறுத்தினரல்லர். தன்னலங் கருதாது குடி நலங் கருதும் பெருந்தகையாகிய பூதப்பாண்டியன் அன்பின் வயப் பட்டானாய் அவைக்களத்தோரை நோக்கித் தன் கடமையை ஆணித் தரமாக் கூறுகிறான்; அவையோர் பெரு மகிழ் வெய்துகின்றனர். வாயார வாழ்த்தினர்; மனமாறப் புகழ்ந்தனர்; புலவர் பாடினர். புரவலன் மகிழ்ந்தான்.

இப்புற நானூற்றுச் சாசனத்தையும், மனமின்றிப் பிறர் வற்புறுத்தலின் பேரில் தோன்றிய ஜான் மன்னனின் சாசனத்தையும் ஒப்பு நோக்கி பழந்தமிழ் மன்னர்களின் ஆட்சிமுறை ஏனை நாடுகளைவிட செப்பமுற்றுச் சிறப்புடன் நிகழ்ந்தமையை அன்பர் சிந்தித் துணர்வார்களாக.

---

## சந்தா நேயர்கள் கவனிக்க

நமது சந்தாதாரர்களில், சிலர் நமக்கு கடிதம் எழுதும் பொழுது அவர்களுடைய சரியான சந்தா நெம்பரை தெரிவிக்காமல், தவறான சந்தா நெம்பரை குறிப்பிட்டு எழுதி நமக்கு மிகவும் கஷ்டத்தைக் கொடுக்கிறார்கள். ஆகையால் அவர்கள் இனிமேலாகிலும் இவ்வித தவறு நேராமல் கவனித்து எழுதினால் உடனே பத்திரிகைகள் அனுப்பிவைக்கப்படும்,

மானேஜர்.

# விஞ்ஞானப் புனல்

(டி. பி. நவநீத கிருஷ்ணன், M. A.)



(சென்ற இதழ் தொடர்ச்சி)

அவ்விளைவுகளுக்குக் காரணமான கலைக் குழுக்களைப் பாது காத்தற்கும், விளைவுகள் பெருக்கமடைவதற்கான வழிகளில் அக் குழுவினரை ஊக்குவித்தற்கும், விளைவுப் பொருள்களை, நடுநிலை யானதும் நேர்மையானதுமான முறையில், எல்லோர்க்கும் பகிர்ந்து அளிப்பதற்குமான அறநெறியைக் கையாண்டு சமூக அமைப்பு ஏற்படுத்துதற்கும், அவ்வமைப்பின் வழியே ஏற்பட்ட ஒழுங்கு முறையை அமுலுக்குக் கொண்டு வருவதற்கும், நடுத்திரட் டிருக்கை யியலான அதிகாரம் நிறுவப்படும். நாகரிக வியலான ஆட்சிக்குட்பட்ட மக்கள், தம் உரிமைகளில் சிலவற்றை இழக் கின்றனர். ஆனால் அவ்வாறு ஒடுக்கப்பட்டதற்கு ஈடாய், தம் வாழ்க்கையில் பல நலங்களைப் பெறுகின்றனர்.

நாகரிக வியலான சமூக அமைப்பு முறை மிகவும் சிக்க லானது. அவ்வமைப்பு முறையில், அதன் பல பாங்குகளும் பல வாறானவும் பலவகைகளானவுமான இணைவுகளும் பிணைப்புகளும் தொடர்பு கொண்டுள்ளவாறான விதத்தில் அமைந்துள்ளன. எனவே, எங்கேனும் ஊழல் ஏற்படினும், அதன் விளைவு வாழ்க் கையையே சீர்குலைக்கும் வண்ணம் பரவலாம். அமைப்பின் பல பகுதிகளிலுமுள்ளவர், சீரான முறையில், தத்தமக்கான பணிகளை ஆற்றுவதினாலேயே, எல்லோரும் நல் வாழ்க்கையைப் பெறலாம். இதனாலேயே, நாகரிகவியலான ஆட்சி முறையைக் கொண்ட மக் களிடை, 'பொதுநலம்' என்பதே குறிக் கோளாயுள்ளது. ஆனால், 'பொதுநலம்' என்பது என்ன வென்பதைப் பற்றின கருத்து, அச்சமூகத்திலுள்ள எல்லோரிலும் ஒரேவாறா யிருக்கவேண்டும். அவ்வாறு அமையாது, அது வெறும் 'கத்துச்சொல்' (ஸ்லோ கன்) லாய் மாறிவிட்டால், அது பெயரளவில் மட்டும் பொது நல மாயிருக்குமேயன்றி, கருத்திலும், செயலிலும் பொது நலமாயிருக் காது. இவ்வாறான கத்துச் சொற்கள் மட்டும் பெருத்த சமூகம் சீர்குலையும் என்பதில் ஐயமில்லை. 'பொது நலம்' எனின், பெருங் கூட்டங்கள் போட்டு 'பொதுநலம் வாழ்க்' வென்று மேலும் மேலும் தொண்டை கிழியக் கத்தி, ஆரவாரிப்பது அன்று. 'பொது நலம்' எனின், பொதுமக்கள் பணத்தைக் கொண்டு பொது விருந்துகள் உண்பதுமன்று. அப் பொதுக் கூட்டங் களும், பொது விருந்துகளும், சிலரின் பெருமையைப் பறை சாற்றுவித்தற்கும், அவர்களை யண்டிப் பிழைக்க எண்ணு வோர்க்கு இடந் தருவதற்கும், மற்றவர்கள் பொழுது போக்குக் காகவும் ஏற்படுபவையே. இவ்வகையானவற்றால் 'பொது நலம்'

என்பதின் பாற்பட்ட உண்மையான கருத்து மறையுமேயன்றி, வெளிப்பட்டுப் பரவாது. எனவே, அவை பொதுநலத்திற்குத் தடை செய்பவையேயன்றி, பொது நலத்தைப் பெருக்குபவையன்று. உண்மையான நாகரிக வியல் ஆட்சிமுறையில், 'பொது நலம்' எனின், சமூக அமைப்பு முறையில், தம் பாற்பட்ட பணியில் தேர்ந்த அறிவும், வினைச் செய்வகைத் திறனும் பெற்று, வினைச் செய்யுங்கால், பல்லோருடனும் 'ஒத்துழைக்கும் பழக்கத்தைப் பெறுதல்' என்பதேயாம். 'தம் பணி தமக்கு மட்டுமே நலமளிப்பதுடன் நில்லாது, சமூகத்திற்கே பலன் தருவது. பணி செய்யும் திறன்மட்டும் போதாது. ஒழுங்குமுறையான அமைப்பில், பிறருடன் சேர்ந்து, அவர்களுடன் இணைந்து வேலை செய்யவேண்டும். இவ்வகையில் எப்பணியும் செவ்வனே செய்யப்பட வேண்டும். பாவனையாய்ச் செய்வதால் சமூகத்திற்கே அழிவு ஏற்படும்' என்னும் வழியே, பொது நலக் கருத்து பரவும். பொதுக்கூட்டங்களில், தத்தம் கலைகளைச் சிறப்பியல் வகையில் பயின்றவர்கள், அறிவின் பாற்பட்ட வழிகளில், அறிவுப் பெருக்கம் ஏற்படும் வண்ணம், பாடுபட்டேனும் அறிவுற வேண்டும் என்ற ஆர்வத்தால் தூண்டப்பட்டு, கருத்தூன்றிக் கவனித்துச் சிந்தனை செய்யும் மக்களுக்கு, தேர்ந்த தெளிவுப் பொழிவால், அறிவுறுத்துவார்கள். செவிக்கினிய மந்திர மொழிகள் மட்டுமே அறிவென்பதும், அம்மொழிகளைப் பொழிதலே அறிவுறுத்தலென்பதும் ஏற்படாது. இவ்வகையில் சொற்பொழிவாளர் 'அறிவை யூட்டினோம்' என்ற எண்ணத்தாலும், கேட்போர் 'அறிவடைந்தோம்' என்ற எண்ணத்தாலும், தம்மையறியாமலே மயக்குண்டு மகிழ்ச்சியுறும் நிலைமை யேற்பட்டது. உண்மையான நாகரிகவியல் ஆட்சியில், சிறப்பினரான நடுத்திரட்டு இருக்கையாளர், நாம் முன்னரே எடுத்துக் கூறியவகைகளில், சிறப்புற்றிருப்பர். இதுவே, சிறப்பியல் முறையைப் பின்பற்றிய நாகரிகவியல் அமைப்பு முறையில் மிகவும் முக்கியம். பொதுக் கூட்டங்கள் போட்டுப் பொதுவெனும் நோக்கத்தை, ஆக்கவழிகளில் பயன்படுமாறு செய்து, வளர்க்க ஆட்சியாளரே முன்வரவேண்டும். முதலில் சதுப்பு நிலங்களைத் திருத்தும் முகத்தான், பொதுப்பட்டு உழைத்தல் என்ற கருத்து எழுந்தது எனக் கூறியுள்ளோம். இவ்வகையில் ஆட்சியாளர், பொதுக்கூட்டத்தினரை, பொது நலப் பணிகளில் ஈடுபடுமாறு செய்து, பொது நலம் பேணுதல் என்ற கருத்தை வளர்க்கலாம்.

எனவே, நாகரிக வியலான சமூக அமைப்பின் அடிப்படையான கருத்தாகிய சிறப்பியல், ஆட்சிமுறை, தொழின்முறை, பொதுக்கூட்டமுறை இன்னோரன்ன பல துறைகளிலும் உண்மையாய் செவ்வனே நிலைநாட்டப் படவேண்டும். அது நேர்ந்தால் 'தான் செய்யும் பொதுநலத் தொண்டு, தன் பணியைச் சிறப்புறச் செய்தால்' என்ற கருத்து தானே பரவும். அதன் பாற்பட்ட விளைவும் தங்கு தடையின்றி தொடரும். அப்பொழுது, 'மக்களின் நல் வாழ்க்கை' யெனும் சிறப்பு எவ்வகைக் களங்கமுமின்றித் துலங்கும்.

# மறுமணத் தியாகம்

"சமூகத்தொண்டன்"



"அப்படிச் சொல்லிவிடாதே. நான் சொல்வதையும் கேள், தம்பி!"

"என்ன அம்மா கேட்பது? நேற்று காலை நன்ருய் படுக்கையிலிருந்து எழுந்த என் வாழ்க்கை பொக்கிஷம்,...மாதினி, ஒரு நொடியில் பறந்து போய் விட்டது. இன்று வந்து என்னவோ சுடச் சுடச் சொல்லுகிறீர்கள்."

"அதற்கென்ன செய்யலாம்? விதி யாரை விட்டது? போனதைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தால் என்ன ஆகப் போகிறது ?இனி ஆக வேண்டியதை யல்லவா கவனிக்க வேண்டும்? நமக்கு அதிர்ஷ்ட சம்பந்தம் வலிய கிடைக்கக் கூடியதா? ஆகவே தான் உன் அப்பாவும் உனக்குச் சொல்லிச் சரிப்படுத்தி விடுவதாக கச்சாபகேச முதலியார்க்கு உறுதி கூறி விட்டார். தம்பி! நான் சொல்வதைக் கேள். நீ எப்போதும் என் பேச்சையும் சரி, உன் அப்பா பேச்சையும் சரி, தட்டிப் பேசியது இல்லையே. பொறுமையாய்ச் சிந்தனை செய்து பார்; எவ்வளவு நன்மையாக விருக்கு மென்று அப்போது தெரியவரும்" என்று காரியத்தில் கண்ணுடையவள் போல் வாதாடினுள், தாய் போலிருந்த அம்மாது. அவள் பேச்சிலும், முகத்திலும் பிடிவாதம் காணப்பட்டது.

"அம்மா! மன்னியுங்கள், என்னை. போதும் உங்கள் பேச்சு. அவைகளை என்னுல் சகிக்க முடியவில்லை. உங்களுக்கு எப்படித்தான் மனம் துணிந்ததோ இன்று வந்து இப்படி யெல்லாம் பேச! அவை யெல்லாம் யாருக்கு வேண்டி யிருக்கின்றன. அதிர்ஷ்டமாம்; பெரிய விடமாம். இவை யெல்லாம் தேவையுள்ளவர்கள் அடையட்டும். என் அதிர்ஷ்டத்தை நேற்று, ஒரு நொடியில் அடித்துக் கொண்டு போய் விட்டான், அந்த கண்ணற்ற அந்தகன், பாழுங் காலதேவன். அதை நினைக்க நினைக்க என் மனம் ஆயிரம் சுக்கலாய்ப் பொடி படுகின்றது. நீங்கள் என்னவென்றுல், வேறே அதிர்ஷ்டத்தையும், பெரிய வீட்டுச் சம்பந்தத்தையும் அதில் திணிக்கப் பார்க்கிறீர்கள். எனக்கு வேண்டிய தில்லை, அவை யெல்லாம். உங்களுக்கு விருப்பமானுல் தேவிக்கு ஏதாவது தேடி வையுங்களேன். அப்படிச் செய்தால் கடல் பொங்கி கரை புரண்டு விடுமா! வானிடிந்து தலையில் வீழ்ந்து விடும்! ஏனே இந்த பாழாய்ப் போன சமூகம் தெய்வத் தன்மை வாய்ந்த பெண்ணுலகை இப்படி அலட்சியம் செய்கிறது?" என்று துடி துடிப்பாய்ச் சொல்லிக் கொண்டே வரும்போதே அந்த இளைஞன் கண்களில் நீர் தேங்கிற்று. துக்கம் மேலிட்டு வாய் குழற, சொற்கள் தடுமாற அப்படியே அவன் அமர்ந்திருந்த நாற்காலியின் மீது சாய்ந்தான். அவன் வாய் "மாதினி, மா.........தி.........னி" என்று அரற்றிற்று.

இனி, அவனிடம் ஏதும் சொல்ல வியலாது என்று கருதிய அவ்ன் தாய் அங்கிருந்து அகன்ருள்.

உமாமகேசம் பிள்ளை சிவபுரத்தில் பெரிய பண்ணையார் என்று அழைக்கப்பட்டு வந்தார். அவர் தலைமுறை தலைமுறையாய்க் கல்வி கேள்விகளில் சிறந்த நல்ல குடியிற் பிறந்தவர். ஆனுல், அவர் ஒரு பதினேழாம் நூற்ருண்டுப் பேர்வழி. அவரது ஒரே புதல்வனும்,

புதல்வியும் தான் திருவாசகனும், தேவியும். மூன்ருண்டுகட்கு முன் ஒரே நாளில் மக்கள் இருவருக்கும் மணம் முடித்து வைத்தார். ஆனல், தேவியின் கணவன் மணம் நிகழ்ந்த ஒரு திங்களுக்குள் அவளை, ஈவு இரக்க மற்ற சமூகத்தின் கொடுமைகளுக் கிடையில் வதைய விட்டு மாண்டு போனன். அழகும் அன்பும் மிக்க திருவாசகனின் மனைவி மட்டும் மூன்ருண்டுகள் இன்ப வாழ்வில் திளைத்திருந்து, நேற்று தான் உடையில் தீப்பற்றிக் கொண்டு பரிதாபமாய் இறந்து விட்டாள்.

செழித்த இளமையும், சீர்மிகு இன்பமும் கொழித்து மேலோங்கும் நாளில் வாழ் வெல்லாம் சிதறுண்டு சீர்குலைந்த தென்ருல், அவ் வீட்டில் மகிழ்ச்சி இருக்குமா வென்பது சிந்திக்கத் தக்கது தான். கணவன் இறந்த நாள் தொட்டு தேவி, துக்கம் என்னும் கூரிய கோரைப் பற்களுக்குத் தன்னுடம்பை யிரையாக்கிக் கொண்டும், சோகம் தன்னை விழுங்க தான் அதை விழுங்கியும், இவ்விதம் உள்ளும் புறம்பும் ஒரே சோகாகாரமாய், எலும்புந் தோலுமாக இளைத்துக் கொண்டே வந்தாள். அவளை விளக்கமாகச் சித்தரித்துக் காட்ட வேண்டுமானல் காசநோய் கண்டு மரணப் படுக்கையில் கிடக்கும் ஓர் நோயாளி போல் தான் காட்சி யளிப்பாள். இப்படி யிருந்த போதிலும் தன்னலப்புலிகளாயுள்ளோர்களை இந்தக் கோரணிகளெல்லாம் பாதிப்பதே யில்லை போலும்.

மாதினியின் மரணச் சடங்கு முடிந்து மறு நாள் பால் தெளி சடங்கும் ஆயிற்று. வந்திருந்தோ ரனைவரும் தத்தம் இல்லங்களுக்கு ஏகினர். பின்பு அங்கிருந்தவர் காஞ்சிப்பதி கச்சாபகேச முதலியார் ஒருவர் தாம்! மனைவி யிறந்த பின் கணவனின் மறு மணம் பற்றிய பேச்சு பால் தெளி நாளிலேயே தொடங்க வேண்டு மென்றும் கண் மூடி அசட்டு வழக்கம் இன்றைக்கும் தமிழ் நாட்டில் இருந்து வருகிறது. எனவே, அன்று திருவாசகனின் மறு மணம் பற்றிய பேச்சு நிகழ்ந்த போது கச்சாபகேசரும் அதில் கலந்து கொள்ளத் தவறி விடவில்லை. பொருள் ஒன்றே நல்வாழ்க்கைக்கு உறுதி தருவது என்ற கொள்கையில் மயங்கிக் கிடந்த திருவாசகனின் பெற்ருேர் கச்சாபகேச முதலியாரின் பசப்புச் சொற்களில் மயங்கிவிட்டனர். இந்த மயக்கோடுதான் திருவாசகனின் தாய் அவனை மறுமணத்திற்கு இறங்கும் படி வற்புறுத்தினள்.

* * * *

மேற் சொன்ன நிகழ்ச்சிகள் நடந்து ஓராண்டு சென்று விட்டது. பிறகு ஓர் நாள் சிவபுரம் கச்சாபகேசம் பிள்ளை இல்லத்தில் திருமண ஆரவாரம் சொல்லி முடியாது. திருவாசகனின் மறு மணப் பேச்சு தொடங்கி ஓராண்டாகியும் அவன் உடனே இசையாது எதிர்ப்பு காட்டி வந்தான். ஆனல் மனைவியின் அன்பு நிறைந்த உருவம் நாளடைவில் தன்னுள்ளத்தி லிருந்து மறைந்து கொண்டே வர வர, எதிர்ப்புணர்ச்சியும் குறைந்து கொண்டே போக முடிவில் மணம் செய்து கொள்ள இணங்கி விட்டான். ஆகவே மணம்.

நிகழ்ந்தவொரு நிகழ்ச்சியைப்பற்றித் தடிப்பேறிய உணர்வு நாளடைவில் குறைந்துகொண்டே வந்து முடிவில் அதன் நினைவும் இல்லாமல் மறந்து போவது இயற்கை. இந்த இயற்கை ஆடவர், மகளிர் ஆகிய இரு சாரார்க்கும் ஒத்ததே யென்பது சொல்ல வேண்டியதில்லை. ஆனல், முட்டாள்தன மாக சமூகம், கணவனை யிழந்த கைம்பெண்களைப்பற்றிய வரை இந்தக் கொள்கையை மறுத்து கைம்பெண்களை உயிரோடு சித்திரவதை செய்து கொண்டிருக்கிறது. குறிப்பாக தமிழகத்தில் இந்தக் கொடுமை சகிக்க கூடாத வொன்று.

திருவாசகனும், மறைமகளும் மணப்பந்தலில் அமர்ந்திருந்தனர். தாலி கட்டு முன் நிகழவேண்டிய சடங்குகள் முடியவும், மணத்தை நடத்தி வைக்கும் மறையவர் மங்கல நாணை ஒரு தட்டில் வைத்து அதையெல்லோரும் தொட்டு வாழ்த்தும்படி வேண்டி, அதைக் கையிலேந்தி கூட்டத்திற்குள் நுழைந்தார். அப்போது மணமகனின் கவலை தோய்ந்த கண்கள் அக் கூட்டத்தில் யாரையோ தேடித் துழவிற்று. மணப்பந்தலில் இருந்த கூட்டம் மகிழ்ச்சிக்கடலில் அழுந்திக் கிடந்தது. மங்கலநாண் சூட்டும்படி மணமகனுக்கு மறையவர் ஆணையிட்டார். தாலியைத் தயக்கத்துடன் எடுக்கப்போன திருவாசகன் முகம் "குப்" என்று இருண்டது. அவன் "சிவ்" என்றெழுந்தான். அதைக் கண்டோரெல்லாம் இன்னதென்று அறியாது "திறு திறு"வென்று விழித்தனர். எழுந்த மணமகன் யாரையோ கவலையுடன் தேடி யலைந்தான். முடிவில் கூடத்து அறை யொன்றில் நுழைந்தான். அவனைத் தொடர்ந்து இரண்டொருவரே அறைக்குள் புகுந்தனர்.

அங்கு அவன் என்ன கண்டான்? தேவி, தன் துர்பாக்கியவதியான தங்கை தரைமீது குப்புறக் கிடந்து பொருமிக் கொண்டிருந்ததைத்தான். துக்கத்தில் புதைத்து கிடந்த அந்த வாடிய கொடி போன்ற கைம்பெண்ணின் நிலை திருவாசகனை உருக்கி விட்டது. உருக்கி விட்டதென்று சொல்லுவது? எரித்து விட்டதென்றே சொல்லிவிட வேண்டும். அவளை பதைபதைப் போடு வாரி மார்பின் மீது சாத்திக்கொண்டான். பிறகு அவளது களையிழந்த முகத்தைத் துடைத்துக்கொண்டே "தேவி! உனக்கு என்ன செய்கிறது? ஏனம்மா குமுறுகிறாய்?" என்றபோது அவன் குரல் துயரத்தால் தழுதழுத்தது.

தேவி, தன் கண்களை அரைப் பார்வையாக விழித்து அண்ணன் முகத்தை நோக்கினாள். அவள் வாய் ஏதோ சொல்ல முயன்றது. ஆனால் பேச்சு எழவில்லை. குறிப்புணர்ந்த திருவாசகன், "தேவி! சொல்லம்மா; என்ன சொல்ல விரும்புகிறாய், சொல்; தெரியட்டும்" என்றான்.

"அண்ணா! என்னருமை அண்ணா! நான் என்ன சொல்லட்டும். இந்தப் பாழும் உயிர் உடம்பிலிருந்து கொண்டு ஏன் என்னை யொறுக்க வேண்டும்? நான் இந்த உலகில் இருக்கத் தகுதியற்றவள்! என்னால் என்ன பயன் இவ்வுலகத்திற்கு? அல்லது, அதனால் எனக்குத் தான் ஏதாவது ஆறுதலா? சோற்றுக்குக் கேடும் பூமிக்குச் சுமையுமாக நான் அவதிப்பட விரும்பவில்லை. நான் பெற்றோர்க்கு ஓர் தலைச்சுமை; சமுகத்திற்கோர் சனியன். எனக்கொரு நரகம் போலல்லவா இருக்கிறது இந்த வுலகு. புல் பூண்டு முதலானவும் என்னைக் கண்டு சிரிக்கின்றனவே, நான் அவைகளுக்கு என்ன தீங்கு செய்தேன்? ஆ! ஜெகதீசா, இந்தக் கொடுமையான சமுக சட்டத்தின் பயங்கரமான வாயினின்று என்னை மீட்க மாட்டாயோ? பெண் பாவம் பொல்லாது என்பது உலகம் அறியவில்லையோ! என்னை உன் குளிர்ந்த மலரணைய திருவடிக்கு ஆளாக்கிக் கொள்" என்று தாழ்ந்த குரலில் மொழிந்தாள்.

கைம்பெண்ணாய்க் கண் கலங்கும் தேவியின் வாயிலிருந்து வெளிப்படும் சொற்கள் நமது இதயத்தைப் பிளக்கின்றன. நாம் எவ்வளவு அவள் உள்ளத்தை அளந்து அறிகிறோமோ, அதை விட, திருவாசகன் பதின் மடங்கு அதிகமாய் அவள் மனத்தை நன்கு அறிந்து கொண்டான். (இச்சமயத்தில் மங்கல வாத்தியங்கள் ஒலியாமலிருந்தன.) வீதியிலிருந்து புறக்கடை வரை ஒரே அல்லோல கல்லோலம். பந்தலில் இருந்த உற்றாரும், மற்றோரும் பலப்பல பேசிக் கொண்டிருந்தனர். ஒருவர் முகத்திலும் ஈயாடவில்லை. அதிசயமும், ஆத்திரமும் திகைப்புந் தான் இடைவிடாது ஆட்சி புரிந்தன, அங்கே.

"தேவி! உன் உள்ளத்திலிருந்து சோக வடிவாய் எழும் உணர்வு சித்திரங்களை யெல்லாம் நான் காண்கின்றேன். அவை என் நெஞ்சைப் பிளக்கின்றன. நான் குற்றவாளியானேன். தன்னலமென்னும் நாற்றச் சேற்றில் வழுக்கி வீழ்ந்து விட்டேன். பெண்ணுலகை அவமதித்து விட்டேன். இந்து சமூகச் சட்டம் என்னும் இடிந்து கிடக்கும் குட்டிச் சுவற்றை அறக் கடவுள் வாழும் கோயில் என்று கருதி என் லட்சியத்தை அந்த இழிவுக்கு முன் பலியிட்டு விட்டேன். என்னுடைய இந்த பிறவியைப் பாழாக்கிக் கொண்டேன்'' என்று தாழ்ந்த குரலில் தனக்குத் தானே சொல்லிக் கொண்டிருந்தவன், திடீரென்று ஏதோ வோர் விசையால் தூண்டப்பட்டவன் போல் எடுப்பான குரலில், "ஓ! நான் யாருக்கும் அஞ்சேன்! எதற்கும் அடி பணியேன்! என் உயிரை விட்டாலும் விடுவேன், என் லட்சியத்தை யாரும் தொடுவதற்கும் விடமாட்டேன். ஆணுக்கென்றும், பெண்ணுக் கென்றும் வெவ்வேறு சாத்திரங்களும், சட்டங்களும் எழுதிக் கொண்டு புனிதமான பெண்ணுலகை அழித்து வரும் எந்த சக்தியையும் நான் துகள் நூறாகச் செய்து முடிப்பேன். எனது ஆண்மையையும், மானத்தையும், மனசாட்சியையும், குறிக்கோளையும் தெய்வத் தன்மையுடைய பெண்மைக்கு சூட்டும் மலர்களென்று கொண்டுள்ளேன். அவைகளைப் பெண்ணுரிமை மறுக்கும் அநீதிச் சட்டமாகிய பேயின் காலடியில் மிதிபட விடேன். அருமைத் தேவி! இதோ என் முகத்தை நோக்கு. நான் இனி எந்த மகளையும் மணக்கப் போவதில்லை. இது சத்தியம். தமிழகம் கைம் பெண் மறு மணத்தை யொப்புக் கொண்டு அந்தப் புனிதப் பணியை தினசரி வாழ்வில் கொண்டு வரும் வரை, என்னை ஈன்றெடுத்த இந்தத் தமிழ் நிலத்தில் நான் நிற்பதையும் வெறுக்கின்றேன். ஏ தமிழகமே! நீ சக்தி வடிவாம் மங்கையரை இழிவு செய்து எத்தனை காலம் வாழ்வாய்?'' என்று ஆவேசங் கொண்டவன் போல் வெளியேறினான். அது காறும் மெய் மறந்து கிடந்த துர்ப்பாக்கியவதியான தேவி, தன் அண்ணனைத் தொடர்ந்து ஓட, அவள் பின்னே வேறு சிலரும் சென்று திருவாசகனை திரும்பும்படி இறைஞ்சி மன்றாடினார்கள். தேவி முடிவாக "என் அருமை அண்ணா! என் பொருட்டு இப்படி மணப் பந்தலில் இருந்து வெளியேற வேண்டாம். தங்கள் மணம் நடக்கட்டும். என் விதி என்னைத்தான் சார்ந்தது. நான் அதை அனுபவித்து மாள்கின்றேன்'' என்று கண்ணீரும் கம்பலையுமாக எடுத்துச் சொல்லியும் அவன் திரும்பிப் பாராது நடந்து விட்டான்.

நாட்கள் சில சென்றன. திருவாசகன் வளர்த்த தியாகத் தீயில் தங்கள் அறியாமைகளையும், அதனால் விளைந்த பாபங்களையும் நீறாக்க உறுதி செய்து கொண்டார்கள், அவனது பெற்றோரும் கச்சாகேபசரும். தங்கள் பெருஞ் செல்வங்களை யெல்லாம் கைம்மை மறுமணக் கழகத்திற்கு வைத்து விட்டு, அந்த நாளிலிருந்து பல கைம்மை மறு மணங்களை ஆண்டு தோறும் நடத்தி வைத்து வரலானார்கள். என்றாலும் திருவாசகன் வருகையில் நினைவும் கவலையும் இருந்து வந்தன. தேவியும், மனைவியாக வந்த மங்கையும் "அவன் திரும்பி வந்தாலன்றி மணம் செய்து கொள்ளோம்'' என்று உறுதி கொண்டு, தவங் கிடக்கின்றனர்.

ஓ தமிழகத்து இளைஞர்களே! உங்கள் பங்கு என்ன? நீங்களும் திருவாசகன் வளர்த்த தியாக வேள்வியில் உங்கள் சுய நலத்தை யெரித்து விட்டுப் பெண்ணுலகுக்கு மதிப்பு காட்டுவதற்கு அறிகுறியாக கைம் பெண்களை மணந்து மகிழுங்கள்.

# தேசிகனும் தேசப்பற்றும்

(சு. வே. நடராஜன்,)



தேசிகன் யார்? உயர்திரு. தேசிக-விநாயகம் பிள்ளையவர்களே யாவர். இவரை நம் தமிழ் நாடு நன்கறியும்.

வஞ்சி நாட்டின் கண்ணுள்ளது நாஞ்சில் நாடு, அதன்கண் அமைந்தது தேரூர். இதுவே பிள்ளையவர்களின் பிறப்பிடம். இவ்வூரில் அவர் 1876-ம் ஆண்டு பிறந்தார். இதுகாலை, புத்தேரியில் வதிகிறார்.

ஸ்ரீலஸ்ரீ சாந்தலிங்கத் தம்பிரானிடம் தமிழ் பயின்றவர். திருநெல்வேலி உமையொரு பாகக் குருக்களிடம் சிவதீட்சை பெற்றவர். கோட்டாறு, திருவனந்தபுரம் ஆதிய இடங்களில் ஆசிரியராயிருந்து அரும்பணி ஆற்றியவர்.

தெய்வ பக்தியிற் சிறந்த தெய்வீகர்; தேச பக்தியிற் தேர்ந்த அன்பர்; சாந்தகுணம் நிரம்பிய சான்றோர்; கருணை நிறைந்த கருத்தாளர்; ஒழுக்கத்தில் விழுமிய பெரியார்; கல்வியிற் பெரியர்; கவித்துவ முடையர்.

அவர் கவிகள் அருமையும் பெருமையுமுடையன; அழகும் ஆழமுமுடையன; சொல்நயம் பொருள்நயம் வாய்ந்தன; நகைச்சுவை ததும்பியன; செந்தமிழில்—இனிய எளிய நடையில்—கவினுற அமைந்தன. புலமிக்கவரின் புலமை தெரிதல் புல மிக்கவர்க்கன்றோ புலனும், வேறு யாவர் அறிவர்? கடவுளிடம் கரைகொள்ளாப் பற்றுடைய கவிதைகள்; இயற்கையில் ஆராத அன்புடைய கவிதைகள்; நீதிகள் நிறைந்த கவிதைகள்; மூதுரை செறிந்த கவிதைகள்; அவர் கவிதைகளின் அமைப்பை—அழகை—இன்பை என்னென்பேம்! கவிதைகளின் அருமையை உணர்ந்தன்றோ 'கவிமணி' என்னும் பட்டமும் சென்னை பல்கலைக் கழகத்தார் வழங்கினர்.

'அகத்தினழகு முகத்தில் தெரியும்'. உள்ளக் கிடக்கையன்றோ வெளியிற் செயலாக வெளிப்படும்? எனவே, தேச பக்தி தெளிவுற நிறைந்த அவரது பாடலைக் காணுங்கால், அவரதுள்ளம் தேசப்பற்றுடையதெனின் குற்றமுடைத்தோ? அவர் பற்று எவ்வளவு ஆழமுடைத்தென்று அன்னவர் பாடல்களில் நின்றுந் தெளியலாம்.

ஒவ்வொருவருக்கும் தத்தம் பிறந்த நாட்டின்மீது அன்பும் ஆர்வமும் உண்டாதல் இயற்கை. 'காக்கைக்கும் தன் குஞ்சு பொன்குஞ்சு.' ஆயினும், அவர் தேசத்தினிடை எத்தன்மைய தாகிய அன்பை உடையவர் என்பதை அளந்தறிதல் வேண்டும் அஃது அறிஞர் கடனுமாகும்.

"அன்புடையர் என்பு முரியர் பிறர்க்கு." தனக்கென வாழாத் தன்மையினர்; பிறர்க்கென வாழும் பிறவியினர்; தன் நாட்டிற்கு--தமிழ் நாட்டிற்கு—தமிழ்ப் பாஷைக்கு உடல், பொருள், ஆவி மூன்றும் அர்ப்பணித்த,பெருந்தகை என்ருல் மிகையாகா.

பண்டை நாள் மங்கை நல்லாளொருத்தி இருந்தனள். அவள் தந்தை, தமையன்மார், கணவன் இவர் அனைவரும் போரில் பட்டனர். எனினும், மாற்ருர் மறம் மாறிலது. சிறுமகன் தாய்ப்பால் பருகிக் கொண்டிருந்தான். அம்மகனை, தன் மார்பகத்தினின்றும் இழுத்து, ஈட்டி கையில் தந்து போருக்கனுப்பினள். இவளன்ருே வீரமகள்! இத்தகைய விரமகளிர் எண்ணிறந்தவரைப் பெற்றெடுத்தது இப்பாரதநாடு. இப்பெற்றிய பாரதநாடு, அறங்குன்றி, மறங்தேய்ந்து பற்றற்றுப் பாழுங் குழியில் வீழ்ந்து கிடந்தது. அந்நாள் எந்நாளும் நன்னுளாக்க நம் நாட்டில் பாரதி தோன்றினர். இன்மொழியால்—இசைத் தமிழால் புத்துயிர் பெற பாடல்கள் பல தந்தனர்.

நம் பிள்ளையவர்களும் 'பாரதி பாடலும் பட்டிக்காட்டானும்' என்னுந் தலையங்கத்தில் 'கரும்புத் தோட்டத்திலே, செந்தமிழ் நாடு, பாஞ்சாலி சபதம், சுதந்திரப் பள்ளு, தொண்டு செய்யு மடிமை என்பன வர்திய பாரதி பாடல்களைச் சுட்டிக்காட்டிச் செல்கின்ருர்.

'உள்ளந் தெளியுமொரு பாட்டிலேயடா—மிக்க
ஊக்கம் பிறக்குமொரு பாட்டிலேயடா
கள்ளின் வெறிகொளுமோர் பாட்டிலேயடா—ஊற்ருய்க்
கண்ணீர் சொரிந்திடுமோர் பாட்டிலேயடா.'

என்று பாரதி பாடல்களைப் பாராட்டுகின்ருர். அவர் பாடல் கண்டு உள்ளத் தெளிவில்லாதாரை உள்ளந் தெளிய வேண்டுகின்ருர்; ஊக்கமிழந்தவரை ஊக்கமுறத் தூண்டுகின்ருர்; நாட்டுப் பற்றற்றவரை பற்று வெறி கொள்ள நாட்டுகின்ருர்; நாட்டின் நிலைகண்டு ஊற்ருய்க் கண்ணீர் உகுக்க உரைக்கின்ருர். என்னே! நம் கவிமணியின் உளப்பற்று.

'செந்தமிழ் நாட்டின்—முதன்மொழி
செவியிற் சேரு முன்னே
அந்தமில் லாமல்—உள்ளத்தில்
அமுத மூறுதடா"

என்பது தன் நாட்டின்மீது வைத்த ஆழ்ந்த அன்பையும் அபிமானத்தையும் தெள்ளிதின் தெளிவுறுத்தும்.

'செந்தமிழ் நாடெனும் போதினிலே—இன்பத்
தேன் வந்து பாயுது காதினிலே'

எனப் பாரதியாருங் கூறிப் போந்தார் அன்ருே!

இந் நாவலந் தீவிலுள்ள நம் பெரியோரெல்லாம் பாவங்களை ஐங் கூறு படுத்தினர். அவை பொய் கொலை, கள்வு, கள், காமம்,

எனப்படும். இவைகளை நம் முன்னோர் நெஞ்சால் நினைக்கவும் அஞ்சுவர். பிற நாட்டார் இப் பெரும் பாவங்களுள் பலவற்றைச் சிறு குற்றமாகவும் கருதார். மேலை நாடுகள் பலவற்றில் கொலையுங் கள்ளும் பாவ—வுணர்ச்சி இல்லாமலே பயிலப்படும். இஃது அவர்கட்கு பொழுது போக்கும் ஒரு சிறு விளையாட்டு போலும்! தற்போதும் மேலை நாடு வெடி குண்டு வீச்சினிற் குடி கொண்டு களித்தல் கண்கூடு.

கொல்லா விரதங் கொண்டோரே நல்லோர். கொலை முதலியன அகந்தூய்மை இல்லாரால் இயற்றப்படும். ஆகவே, அகந்தூய்மை உடையராதல் வேண்டும்; கொல்லாமையைக் கடைப்பிடிக்க வேண்டும்; தன்னுயிர்போல் மன்னுயிர் ஓம்ப வேண்டும்; எவ்வுயிரிடத்தும் அருளுடையராய் இருத்தல் வேண்டும்; தண்ணளி செய்யும் இறைவழி நிற்க வேண்டும்.

பிறநாட்டு நாகரிகம் நம் நாட்டில் விரவியது—விரவுகின்றது. யாண்டும் கொலைத் தொழில்! எங்கணும் உயிர்ப்பலி! புத்தர் பிரான் தோன்றினார்; கொலைத் தொழிலை உலைத்தார்; இன்னுரைகள் ஈந்தார்; அறிவுரைகள் தந்தார்; நாடும் அவர் வழி நின்று தழை வுற்றது.

"புத்தன் உரையைப் பொன்னுரை யாக
நித்தம் நித்தம் நினைத்த பயனாற்
கொல்லா விரதம் குவலயத்
தெல்லா வுயிர்க்கும் இன்பளித் ததுவே"

என்றார் நம் கவிமணி. இவ்வாறு புத்தரின் கட்டுரையைக் கட்டுரைக்கு மிடையே, பாரத நாட்டைப் பாராட்டும் அவர் தம் தேயப் பற்றுதான் என்னே!

ஒற்றுமை உயர்ந்தது—விழுமியது. ஒற்றுமைக்கீடு ஒன்று மில்லை எனலாம். ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே; இன்றேல் தாழ்வே.

"ஒற்றுமை யாக உழைத்திடுவோம்—நாட்டில்
உற்ற துணைவராய் வாழ்ந்திடுவோம்"

என்று இந்தியாவில் நிலவும் சூழ்லகளை நினைந்து, கவிமணி, நம்மை ஒற்றுமையுடன் வாழ வேண்டுகிறார்.

ஒற்றுமையே உயர்வைக் கொடுக்கும்; ஒற்றுமை உள்ள நாடே உயர்ந்த நாடாகும். ஆதலால், நாடு நலமுற ஒற்றுமை நலத்தை நாடுகிறார். இஃதை திரு. தேசிகர், உள்ளந் தெளிவுற தெள்ளத் தெளிந்த தீந்தமிழில் தீட்டி யுள்ளார்.

"நாடி எவரொடும் நட்பினராய்த்—தேச
நன்மைக் குழைப்பதில் நஷ்டமுண்டோ"

எனத் தேச நன்மை கருதி நட்பினராய் ஒன்று பட்டுழைக்கத் தூண்டுகின்றார். நாட்டுக்கு நன்மையை நாடுபவர் போடுஞ் சண்டைகளை அவர்கள் ஆடும் நாடகமென்று நகைக்கின்றார்.

உலகில் தோன்றிய அனைவருக்கும் இறப்பும் ஒன்றே; பிறப்பும் ஒன்றே; ஆண்டவன் பார்வையில் அனைவரும் ஒன்றே; யாவரும் ஒரு சாதியினரே. ஆகையால், 'சாதி சாதி' என்று சதி செய்யும் மாயத்தை மாய்க்க வேண்டுகின்றார்.

"சாதி சாதி யென்றுநிதம்
சண்டை போட்டு மண்டைகளை
மோதி மோதி யுடைப்பதொரு
மூடச் செயலென் றுணரீரோ"

எனச் செயற்கை வெறுத்த செம்மையாளராய் இயற்கை இன்பே இன்பெனக் கொள்கிறார்.

"ஈன ஜாதியெனும் பேச்சினைப்போல்—நெஞ்சை
ஈர்ந்திடும் வாளொன்று வேறுளதோ"

என வினவுகின்றார்.

"என்சாதி உயர்சாதி இழிந்தசாதி
என்று சொல நாவு மெழா திருக்க வேண்டும்
நெஞ்சாரும் நினைப்பெல்லாம் நிகழ்த்தி நின்றேன்
நின் மலனே இரங்கி நீ யருளுதியே"

என 'எல்லாரு மோர் சாதி' என்னும் சமரசத்தைச் சாற்றுகின்றார். சமரசம் யாண்டுளதோ, ஆண்டு சன்மார்க்கமும் உண்டல்லவா? "நம் நாட்டுச் சனங்கள் சமரசமாய் வாழ வேண்டும்; சன்மார்க்கராய் வாழ்வு நடாத்தல் வேண்டும் நம் நாட்டில் சமரச சன்மார்க்கம் நின்று நிலவ வேண்டும்" என ஆண்டவனை நோக்கி அருள் சுரக்க வேண்டுகின்றார். இந் நீர்மைய அகன்ற மனத்தூய்மையைப் புகலவும் வேண்டுங் கொல்?

சாதியிலே, மக்கள் கற்பித்துக் கொண்ட உயர்வு தாழ்விலே, தாழ்ந்த சிலர் தீண்டாதார் எனப்படுவர். தீண்டாமைப் பேய் நம் நாட்டில் தலை விரித்துத் தாண்டவமாடியது. அதுகாலை அவர்களுற்ற அல்லற்கோர் அளவில்லை. எல்லையற்ற துன்புற்ற அத் தீண்டாதார் உய்யும் நெறி முனைந்தார். அக் காலத்தில் தான் நம் நாட்டிடைப் பல்வேறு சமயங்கள் நுழைந்தன. அவரவர் தமது ஆற்றலுக்கேற்ப மதாந்தரங்களைத் தழுவினர். இது கண்டு நம் பிள்ளையவர்கள் பாடல்கள் பல செய்துள்ளார். "தீண்டாதார் விண்ணப்பத்தில்' அவர்கள் உரிமை உரைக்கும் பான்மை கன்னெஞ்சுங் கரைந்துருகச் செய்யும்.

'குற்றமிலா எமைக்கண்டு கோவிலையும் அடைக்கலாமோ
பெற்றவரைக் காணவரும் பிள்ளைகளைத் தடுப்பாருண்டோ?

'தாகமென்று வருபவர்க்குத் தண்ணீரை அளியாமல்
ஆகமங்கள் ஓதிநிற்றல் அழகாமோ? அறமாமோ'

என எளிய உவமானத்தால் எழிலுற விளக்கிச் செல்கின்றார்; கனிந்த தமிழ் மொழியில் நமதுள்ளத்தைக் கனிய வைக்கின்றார்; அமுதத்தை இதமுடன் அருத்துகின்றார்.

"பண்டுபண் டேயுள்ள பேயாம்—இந்த
பாரத நாட்டைப்பாழ் ஆக்கிய பேயாம்"

" இப் பெரும் பேயினி மேலும்—நம
திந்திய நாட்டில் இருந்திட லாமோ
கப்பலில் ஏற்றுவோ மையா—நடுக்
காயல் கடல்கண்டு தள்ளுவோம் ஐயா"

என்றார் கவி. நாடு கடத்தின் ஓடிவந்து விடும்போலும்! காடு புகுத்தின் நாட்டையும் போலும்! ஆகவே நாடுமொழித்து, காடுந் துறந்து, காயலையுங் கடலையுங் கொண்டார் கவி. காயல் நாட்டக முள்ளது: கடல் நாட்டுப் புறமுள்ளது. ஒருகால் காயலில் தள்ளின் கரைசேரும்; ஆனால் கடலில் தள்ளின் இயலுங் கொல்? எனவே காயலை முன்னும், கடலை அதன் பின்னும் வைத்தார். காயல், கடல் கரைகண்டு தள்ளின் மீட்டும் வருமென வெருவினர் போலும்! வாராதொழிய வேண்டின் நடுக் காயல் கடல் கண்டு தள்ள வேண்டுமென நினைந்து போலும் நடு என்னும் அடையுடன் அமைத்தார்.

'நடுக்காயல் கடல் கண்டு சேர்ப்போம்' அல்லது
நடுக்காயல் கடல் கண்டு ஆழ்த்துவோம்'

என்பது சிறப்பு போலும். அவ்வாறு கருதியே நடுக்காயல் கடல் கண்டு 'தள்ளுவோம்' என இழிவுபடுத்திக் கூறினர். என்னே! நம்புலவர் பெருமானின் நெஞ்சப் பாங்கு! இன்னணம் சில சொல்லிப் பல உய்த்துணர வைப்பதன்றோ மெய்ப் புலவர் செயல்!

நம் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டம் யாண்டும் பரவலுற்றது—பரவுகின்றது—பரவும். இதனை அறவே ஒழிக்கக் கருதினார் காந்தியடிகள். கைராட்டினத்தைக் கைக்கொள்ள அல்லும் பகலும் அயராதுழைத்தார்—உழைக்கின்றார்—உழைப்பார். கதரைக் கட்ட உதிர வேர்வை சிந்தினார்—சிந்துகின்றார்—சிந்துவார். அம்மகானது உண்மைக் கொள்கைகளை கவிமணி பொன் போற் போற்றுகின்றார்.

'ராட்டின மல்லாது வேறுபடை—இந்த
நாட்டினுக் கில்லையென்று நாட்டுங்கொடி
'நல்ல சரக்குசீமைச் சரக்கென்று நீர்—இந்த
நாட்டுச் சரக்கைப் பழிக்கலாமோ?'
'பெண்டுகள் பிள்ளைகள் நெய்த—கதருடை
பீதாம் பரத்தினும் மேலாமடா'
'சேலை உடை கதருடையாய்த் திகழ வேண்டும்'
'வேலையில்லாத் திண்டாட்டம் ஒழிய வேண்டும்'
'நெஞ்சின் நூலை நினைப்பது விட்டினிப்
பஞ்சின் நூலிற் பழகத் துணிகுவன்
கெஞ்சு வாழ்க்கையும் கேடும் ஒழியுமே
விஞ்சு செல்வமும் மேன்மையுந் தங்குமே'

என்பன வாதிய தொடர்களில் முன்னவர் கொள்கைகள் மிளிரக் காண்கின்றனம்.

மங்கையரை மணாளர் அடிமைகளாய்—ஆட்டும் பொம்மைகளாய் நடத்துகின்றார். பெண்ணுரிமை வழங்கல் பெருந்தீதென்

இன்றார்; பெண்கள் படித்தலும் பெருமையன்று என்கின்றார். எம் பெருமானுக்கு எவ்வுயிருமொன்றே. உயர்வுமில்லை; தாழ்வுமில்லை.

'எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு''

என வள்ளுவரும், இருபாலார்க்கும் ஒப்பக் கூறியே சென்றார்.

தேசவளர்ச்சிக்குப் பெண்களின் வளர்ச்சி இன்றியமையாத தன்றோ? ஒரு நாட்டின் தாய்மை நிலை பெண்ணாலன்றோ காக்கப் படுகிறது. கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து உற்றறியும் ஐம் புலனும் பெண்ணென்னும் பெருந்தகையாளிட மன்றோ உள? இத்தகைய பெண்களைப் பழிகின்றார் ஆண்மக்கள். இதை திரு. தேசிகர் செந்தேன் பிலிற்றும் செந்தமிழில் செவ்வனம் அமைத் துள்ளார்.

"வாட்டும் உலகில் வழுத்தரிய
வாழ்க்கை துணையாம் மங்கையரை
ஆட்டும் பொம்மை அடிமைகளாய்
ஆக்கி வைப்ப தழகாமோ''

"அன்பினுக் காகவே வாழ்பவரார்—அன்பில்
ஆவியும் போக்கத் துணிபவரார்''

பண்டை மகளிர் மணாளர் அமர்க்களஞ் சென்று சமர் புரிகின்ற னர். ஆண்டு உயிரிழந்து மீண்டு வாரா தொழிகின்றனர். அரி வையர் பலர் அது தெரிந்து, தன் ஆருயிர் நாயகனுக்காக ஆவி துறக்கின்றனர். வேறு சிலர் பூசற்களஞ் செல்கின்றனர். ஆண் டுத் தன் கொழுநனைக் காண யாண்டுந் தேடுகின்றனர். தேடிக் காண்டலும் முகத்தொடு முகஞ் சேர்க்கின்றனர்; ஆரத் தழுவு கின்றனர்; அன்பனுக்காக இன்னுயிர் துறக்கின்றனர். இத் தகையரன்றோ அன்பினுக்காக வாழ்பவர்! அன்பில் ஆவியை யும் போக்கத் துணிபவர்! கற்பிற்கரசி கண்ணகியை அறியார் யார்? இந் நங்கையன்றோ அன்பிற்காக உயிர் தாங்கியவள், அன் பில் ஆவியையும் போக்கியவள்? என்னே! பெண்ணைப் பழிக்கும் இழிநிலை!

முந்தைநாள், பாரத நாட்டில் பஞ்சை நூலாகச் செய்தனர்; நேர்மையான ஆடைகள் நெய்தனர்; அயல்நாட்டிற் கனுப்பி வாணி பத்தை வளர்த்தனர். நாடுஞ் சிறப்புற்றுத் திகழ்ந்தது; செல் வத்தில் செழித்தது; புகழ்பெற்று விளங்கியது. அக்கால நிலையை நினைந்து சிந்தை நைந்துருகுகின்றார் கவிமணி.

'காசுமியர் சால்வை நெய்த கையுமில்லையோ—உயர்
காசியிலே நெய்த பட்டின் காலமும் போச்சோ.'

'அந்நிய நாடுகளுக் காடையனுப்பி—மானம்
அழியாமல் காத்ததுங்கள் முன்னோரல்லவா?
இந்நிலை மறந்து நீங்கள் இந்நாளில்—உங்கள்
இடுப்புத் துணிக்கலைவ திழிவல்லவோ!'

இதனினின்றும் அன்னவர் தேசப்பற்று காய்தல் உவத்தல்

அக்ற்றி நடுநின்று ஆராய்வார்க்கு, அங்கை நெல்லிக்கனி யென விளங்கா நிற்கும்.

பண்டு பாரதநாட்டில் கைத்தொழில் மிக்கிருந்தது; உழவுத் தொழில் சிறப்புற்றிருந்தது. இடைக்காலத்தில் மேல்நாட்டு நாக ரீகம் நம் நாட்டில் புகுந்தது. அன்று பிடித்தது நம் நாட்டிற்குச் சனி. கைத்தொழிலை வெறுத்தனர்; விடுத்தனர். பதவி பட்டங் களை மோகித்தனர். கண்டு தொழுது கைகூப்பி நின்று பெறுங் காசால் வயிறு வளர்த்தனர்; அடிமைக்குழியில் விழுந்தனர்; சுதந் திரத்தை இழந்தனர். ஆனால் கவி, நாஞ்சில் நாட்டு மக்கள் மன நிலை கூறுமிடத்து,

'கொண்ட நிலத்தில் விளைந்துவரும்—அந்தக்
கூழும் அமுதாகக் கொள்ளும் நாடு
கண்டுதொழுது கைகூப்பி நின்று—பெறும்
காசை விடமாகக் காணும் நாடு.'

என்றார்.

நாஞ்சில் நாட்டினர் சொந்த நிலத்தில் விளைந்து வரும் அந் தக் கூழும் அமுதாகக் கொள்கின்றனர்; கைகூப்பி நின்று பெறும் காசை விடமாகக் காண்கின்றனர்; இஃது கைத்தொழிலில் அவர் கள் கண்ட விழுமிய நிலையை விளக்குகின்றது. கைத்தொழில் அருகிய நமது நாட்டில் மீண்டும் அதை நடைமுறையில் கொணர வேண்டுமென ஞாபக மூட்டுகின்றார் கவி.

'செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர்க்
கிந்த நூலுரியதாய் என்றும் வாழ்கவே.'

என்று 'மலரும் மாலையும்' என்னும் நூலைச் செந்தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர்க்கு அர்ப்பணித்த அருங் குணத்தையும் தேசப் பற்றையும் என்னென்று கூறுவது? சிறுவர் பிற்காலத்து ஆக்க வேலையாளர்; தேசத்தின் முழுப்பாரமும் அவர்களைச் சாரும். தேசத்தைப்பற்றி ஒன்றுந் தெரியாதவர்; தேசப் பற்றில்லாதவர், தேசப் பொறுப்பை நிர்வகிக்கின் என்னும்? ஆகவே, அவர்களை தேசத்தில் பற்றுண்டாகச் செய்கின்றார்; அவர்களிடம் தேசப் பற்று மிளிரச் செய்கின்றார். என்னே! அவர் தம் நாட்டுச் சிறு வர்கட்குப் பயிற்றும் பான்மை

'போரிலெழுந்த பஞ்சம்—பாரத
பூமியைத் தாக்குதையோ'

'உலகமிசை இதுபோலும் ஒருதேசம் உளதோ'
'தேசபக்தி செழித்தோங்கி வளரவேண்டும்.'

என வெளிப்படையாய்க் கூறினர். இவை அவரது தேசப்பற்றை பளிங்குபோல் விளங்கச் செய்யும். எனின், வேறு சான்று பகர வும் வேண்டுங் கொல்? இன்ன பிறவாற்றால், அவரது உள்ள மாகிய பள்ளத்தில், பற்றாகிய வெள்ளந் தேங்கி, பாரதநாடாகிய புலத்தில், பாய்ந்து பரவுகின்றது என்பதில் ஐயமில்லை.

# அறியாமைதானே!

(தி. முத்துராமகிருஷ்ணன்.)



மாயஞர் குயவன் செய்த இந்த மண் பாண்டத்தை மேலும் மேலும் வளர்க்க, அதாவது உருப்படியாயிருக்க, ஏதாவது உள்ளே செலுத்தித் தீரவேண்டியதிருக்கிறது. ஏதாவதென்ருலென்ன, ஆகாரத்தை ரொம்ப பக்குவமாகவும், நிதானமாகவும் செலுத்தவேண்டு மென்பதுதான் ஆகார விஷயத்தில் அவ்வளவு கண்காணிப்பும், சர்வ ஜாக்கிரதையும் ஏன்? உடலை சுகமாக வளர்க்க. வளர்த்து அப்புறம் என்ன செய்யவேண்டும்? அதைப்பற்றி பின்னல் பார்த்துக்கொள்ளலாம். நாம் இப்பொழுது இந்த உடலை வளர்க்கும் படலத்தில்தான் தீவிரமாய் முனைந்து நிற்கிருே மென்பதாக நினைத்துக்கொள்ள வேண்டும்.

அதற்கு வேண்டிய ஊண் ஜாபிதாவை ஒருவாறு அலசிப் பார்த்தாய் விட்டது. (ஆனந்த போதினியின் பழைய இதழ்களைப் பார்க்கவும்) பாலி விருந்து பழம் வரைக்கும் பக்குவமாக சாப்பிட்டாலும் உடல் கிருகிரு வென்று வளர்ந்து விடாது. உண்ட மேனியை உடனே சிலர் காண்பிப்பார் கள். அது என்ன மாயவித்தையா? இல்லை. போதிய தேகப் பயிற்சிதான் தேவை. ஊணைச் செலுத்தி உடலை உரம்பெறச் செய்ய வேண்டுமானல் ஒழுங்காக, முறையாக உடற்பயிற்சி அவசியமென்று நம்மெல்லோர்க்கும் தெரிந்த சங்கதிதான். தேவரகசிய மொன்றுமில்லை. (கும்பிக்கு கூழ் இல் லாமலும் குடிக்கத் தண்ணீர்கூட இல்லாமலும், இருக்க வீடு இல்லாமலும் எத்தனையோ ஜீவன் உலக தர்பாரையே வெறுத்து யமன் தர்பார் நடத்திக் கொண்டிருக்கிறது!!!) இதெல்லாம் யுத்தகாலத்தின் அவசியமென்று "சிலர்" நினைக்கிருர்கள் போலும்! நாம், பொதுவாக எல்லோருக்கும் ஒரே நிறை, அளவு இயற்கை தேவியால் அளிக்கப் படுகிறதாகவே நினைத்து கொஞ்சம் காரியங்களை நடத்திச் செல்லலாம். ஏனென்ருல் அந்த நாள், எந்த நாள், "எல்லோரும் சமம்" என்று பொன்தகட்டில் பொறிக்கப்படுகிற நாள் வரா மலா போகப் போகிறது? அதனல் முன் கூட்டி எல்லாம் அறிந்து வைப் போமே? அறிந்திருந்தாலும் கொஞ்சம் ஞாபகம் செய்வோமே. ஆகவே இந்த உடலாகிய யந்திரம் ஒழுங்காக வேலைசெய்ய வேண்டுமானல் தினம் ஒரு தடவையாவது, வியர்க்க வியர்க்க தேகாப்பியாசம் செய்யவேண்டும். அல்லது ஆசனங்கள் போடலாம். எல்லாம் அவரவர்களின் பற்றுதலைப் பொறுத்திருக்கிறது. அப்படி யில்லாமல், தேகத்தை வளைக்க சிரமப் பட் டால், வெற்றிலை பாக்கு வைத்துத்தான் அழைக்க வேண்டும் என்ற நிலை மைக்கு வந்துவிட்டால், கோர சொரூபமாக மாறி, நடக்கவும் ஜீவனில்லையா என்று பிறர் கேட்க நேரிட்டுவிடும். வளர்கிற சதையை கட்டிப் படுத்த தேசப்பயிற்சி அவசியமாகிறது. வாழ்க்கையிலே விரைந்து செல்ல தேகப் பயிற்சி அவசியமாகிறது. அசமந்தத்தைப் போக்க உடல் பயிற்சி முக்கிய மாகிறது. இரத்த ஓட்டம் எங்கும் வியாபிக்க உடம்பின் எல்லா அவயவங் களையும் வளைத்துவிட வேண்டும். இதெல்லாம் நமக்கு சரிவரத் தெரியத் தான் செய்கிறது. இருந்தாலும் "தொந்தியப்பர்கள்" தெரிசனம் கொடுத் துக் கொண்டுதா னிருக்கிருர்கள். தின்ன ஆகாரம் செமிக்காமல் திண்டா டும் திண்ணைத் தூங்கிகளும் இருக்கத்தான் செய்கிருர்கள். பத்மாசனத்தில் உட்கார்ந்தால் "பரம சாது" என்று நையாண்டி செய்யும் அன்பர்கள் இக் தக் காலத்திலும் இருக்கத்தான் செய்கிருர்கள்.

நிற்க, வாழ்க்கையில் முன்னேறும் ஜீவன் இன்னும் ஒரு படி தாண்டி ஆகவேண்டியிருக்கிறது. அதாவது சாப்பாடும், பயிற்சியும் சரியாய் நிகழ்ந்தாலும், மூன்றாவது ஆசாமியை சரிக்கட்டவில்லையென்றால் இந்தக் காற்றடைத்த பை, வெறும் வெத்துப் பையாகிவிடும். அந்த ஆசாமிதான் "மனம்" என்கிற மாய சொரூபி. அவனை நம் வழிக்கு இழுத்து விட்டால் போதும். ஆகாரம் கூட தேவையில்லை என்று பெரியோர்கள் சொல்வார்கள். ஏனென்றால் அவனோடு நமக்கு, எல்லாம் வந்து சேருகிறது. ஆனால் அவன் போகிறவழியிலெல்லாம் நாமும் போகக் கூடாது. அதனால் தான் "காடும் கரையும் மனக் குரங்கு கால் விட்டோட, அதன்பிறகே ஓடும் தொழிலாற் பயனுளதோ?" என்று தாயுமானவர் சொல்லுகிறார். சில சந்தர்ப்பங்களில் "லகானை" கொஞ்சம் பிரயோகிக்க வேண்டும்.

அதற்கு அடிப்படையான சில ஆயுதங்கள் நம்மிடம் எப்பொழுதும் யிருக்கத்தான் செய்கிறது. ஒழுக்கம், உண்மை இவைகள்தான் அந்த ஆயுதங்கள். கட்டிட அஸ்திவாரத்திற்கு அத்தியாவசியமான ஆயுதங்கள். பிறகு கட்டிடங் கட்டவும், வர்ணம் பூசவும், அதற்கு பிறகு பிறர்க்கு பயன் படும்படிச் செய்யவும் சில ஆயுதங்கள் நம்மிடமே யிருக்கிறது. கொஞ்சம் சென்று அதைப் பார்க்கலாம். இப்பொழுது மேலே சொன்ன ஆயுதங்களை நாம் பூரணமாக பிரயோகிக்கும் அந்தஸ்துக்கு வந்து விட்டால் அப்பொழுது நாம் அடையும் ஆனந்தத்துக்கு கேட்கவா வேண்டும்?

முடிவில் ஒரு வார்த்தை. உடல் வளர்ச்சிக்கு ஆகாரம், பயிற்சி, நல்ல சிந்தனை இம்மூன்றும் நமக்கு வாய்த்த மூன்று கண்கள் மாதிரி. மூன்று கண்கள் ஏது என்று யோசிக்கிறீர்களோ? நாம் வேறு; சிவன் வேறா?

---

# உலக நிலையாமை

**அகவற்பா**

"வைகறைத் துயில் எழு"ந்து வந்து, குளிர்பனி
பெய்கரை நடுக்கிட நடுங்கிப் பேரெழில்
பொழில் வளர் எழில் நலம் காணப் போனேன்;
கழிமிகு செந்நிறச் *"செம்மலர்ச் செல்வி" (Rose Flower)
முக மலர்ந்(து) எனைமிக அகமலர்ந்(து) அழைத்தாள்!
நடுப்பகல் வெதுப்பிடப் பொடிப்ப என் சிறடி
நீர்விடாய் தீர்க்கச் சார்ந்தனன் அப்பொழில்;
அந்தோ! "செம்மலர்ச் செல்வி" உள் நொந்தே
வாடி வதங்கித் துடித்துழச் செறிந்தாள்!
மாலை நேரம்; அச் சோலை வழியே
மனமிக ஓய்ந்து உள் மயல் மிகத் தோய்ந்திட
நடந்தேன்; "செம்மலர்ச் செல்வி"யை நாடிக்
குடந்தேன் தெவிட்டக் கொடுக்குமவள் முத்தம்
குடிப்பான்; ஐயோ! கொடுமை, கொடுமை!
வெடிப்புற இதயம் பொடிப்பொடியாய் அவள்
இதழ்உதிர்ந்(து) இறந்து கிடக்கக் கண்டேன்!
பொதும்பரில் கண்ட புவி நிலையாமை
அதுமுதல் நாள்தொறும் அறிந்து, யான்
எதனையும் விரும்பேன் "எனது" என்றிடவே!

—மா. அன்னு. தேவராஜன்.

---

குறிப்பு:—* செம்மலர்; ரோஜாப்பூ காரண இடுகுறிப் பெயர், முள்ளி என்பது ஒப்ப.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.)



## நூதனக் கோள்களும்—பல பாகமும்

சமீபத்தில்தான் மேலைப் புலவர்கள் இந்த நூதன கோள்களைக் கண்டனர். எனினும், பல பாகத்தில் அவற்றை மிகவும் முக்கியம் வாய்ந்தனவாகக் கருதுகின்றனர்.

இந் நூதனக் கோள்கள் நம் இந்திய நாட்டிற்குப் புதியன வன்று. இந்திய வான நூலார் இவற்றையும், இன்னும் பரந்த—எல்லை காண முடியாத வான வெளியில் உள்ள பலவற்றையும் முன்பே கண்டிருக்கின்றனர். பூமிக்குப் பிரத்யக்ஷமான நம்முடைய சூரியனைப் போல பலகோடி சூரியர்களும், அச் சூரியர்களைவிட எத்தனையோ மடங்கு பெரிதான மீனங்களும் (நட்சத்திரங்களும்) அவர்களுடைய கவனத்திற்கு எட்டியிருப்பனவே யென்று அறிகிறோம்.

ஆனால், பூமிக்கு முக்கிய ஆதாரமாகத் தொடர்பு கொண்டிருக்கும் சூரியனுடைய ஆதிக்கத்திற்குள் வரும் கோள்களில் பூமிக்குப் பலன் தருவன இன்னின்னவை என்று நிச்சயித்திருக்கின்றனர். அவ்விதமான நிச்சயம் வெறும் கற்பனை—அல்லது ஊகம் என்று சொல்லிவிடுவதற்கில்லை. அறிவு ஏற்கும் தக்க விதிகளில் மட்டுமே அம்முடிவுகள் இருக்கின்றன.

பலன் தருவதில் ஒளியும்—உஷ்ணமும் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் இருளும்—குளிரும் ஆகும். இவை இரண்டும் ஒன்றுக் கொன்று மாறான எதிர் கோடிகளில் இருப்பன. இவ் இரண்டு எல்லையுள்—அதாவது ஒளி நிலை முதல் இருள் நிலை மட்டும் இடம் பெறுவன பல பாகத்தில் முக்கியங் கொண்டிருக்கும். இயற்றழற் கோளமான சூரியனுக்கு அருகிலுள்ள கோள்கள், அச் சூரியனுடைய "ஒளிவெப்பங்க" ளாகிய அருள் மிக்குடையன வாகவும்—சூரியனுக்குத் தூரம் போகப்போக இருப்பன அந்தந்த அளவில் அவ் அருள் குறைவுடையனவாகவும் இருக்கும். இந்த நெறியில் சூரியனுடைய அருளின் அளவுக்கு ஏற்ப, கோள்கள் பலவும் வேறு வேறான இயல்களில் பலங் கொண்டனவாகத் திகழும். இந்த பலத்தில் பூமிக்குப் பலன் தருவதில் முக்கியமான கோள்கள், பூமிக்கு கீழ்—மேல் இருபாலும் இருக்கின்றன.

பூமியின் கீழ்பால் எல்லை ஒளிநிலைக் கோளான சூரியனுடைய இயற்கையாக வரை கோலப்படுகி[illegible] இதில் எவருக்கும் அபி[illegible]

பிராய பேதங் கிடையாது. ஆனல், பூமியின் மேற்பால் எல்லையை வரை கோலுவதில் மயக்கம் இருக்கிறது. வான எல்லையின் ஒளி விசித்திரங்கள்—அல்லது ஜாலங்கள் ஆராய்ச்சிக்கு எட்டாத சூழ்ச்சியே. ஆயினும், பூமிக்கு மேற்பால் எல்லையின் வரையாக் கீழ்பால் வரையாக வுள்ள ஒளிக்கு எதிரான இருள் நிலையைக் காணுவது சுலப சாத்தியமே. இவ் இருள் நிலையின் கோடியுள் இடம் பெறுவனவும் கீழ்பால் ஒளி நிலையின் கோடி மட்டும் இடம் பெறுவனவும் பலன் செய்வதில் பலங் கொண்டனவாக விருக்கும். இத்தகைய கோள்களேயே இந்திய பல பாகம் பூமிக்குப் பலன் தருவன வென்று நிச்சயித்திருக்கிறது. மற்று, சூர்யனுடைய ஆதிக்கத்தினுள் அடங்குவன வெல்லாம் பல பாகத்தில் சேர்ப்பதற் கில்லை.

பரந்த வான வெளியில் எல்லை காண வியலாது பரவிச் செல்லும் சூர்யனுடைய ஒளிக் கதிர்களின் இறுதி மட்டும் செல்ல இருள் நிலையை அடையக் கூடும். அந் நிலையே சூர்யனுடைய ஆதிக்கத்தை வரையிடும் எல்லையாகும். அது சூர்யனைச் சுற்றி வானத்தில் ஒரு பேரெல்லை மட்டும் உள்ளது. அது இங்கு அவசியமில்லை. சூர்ய ஒளி வியாபித்திருக்கும் எல்லை யுள்ளேயே பூமியிலிருந்து காணக் கூடிய இருள் நிலை உண்டு. அது பூமியின் நிழலால் நேருவது. இந்த நிழலின் எல்லை சூர்ய ஆதிக்கத்திற் குட்பட்டதாய் பூமியின் சுற்று வீதிக்கு வெளியே—அதாவது மேற்பால் இடங் கொண்டு சூரியனைச் சுற்றி வருகிறது. இந் நிழல் வரை பூமிக்குப் பலன் தரும் கோள்கள் அடங்கும் எல்லையைக் குறிப்பிடுகின்றன. இதனால், இவை ஸ்தூலமான கோள்களாக வில்லையாயினும், இருள் நிலையின் பலன்களை ஒளி நிலைக்கு எதிராக நல்கும் 'சாயைகளாக்' இந்திய ஜ்யோதிஷ சாஸ்திரம் கருதுகிறது.

இவ்வழி, பூமியின் மேற்பால் இந் நிழல் எல்லையின் வரைக்கு சற்று அருகாகவுள்ள 'சனிக்கிரகம்' மட்டுள்ளனவே பல பாகத்தில் வருவனவாகும். மேலைப் புலவர்களால் கருதப்படுகிற நூதனக் கோள்கள் இந்திய பல பாகஸித்தாந்தகங்களில் இடம் பெறு திருப்பினும், தல மெங்கும் 'சூர்ய குடும்பக் காட்சி'யை ஆகம வழி நிரு மிக்கையில் இந்நூதனக் கோள்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

---

விருந்தில் ஒருவர்:—ஏனய்யா, நீர் ஒண்ணு நெம்பர் வாயாடி ஆயிற்றே ஏன் சாப்பிடும் பொழுது மாத்திரம் ஒரு வார்த்தையும் பேசுவதில்லை.

மற்றவர்:—நேரம் வீணுகிறதென்று தான்.

* * * *

மலையாளி:—ஐயா அம்பட்டர் யார்? எந்த ராஜ்யம்?

தமிழன்:—ஓய் என்னய்யா? அவர் பிராம்மணரய்யா! அவர் காதில் கேட்டால் ஆபத்துதான். பத்திரம்!

எம். ஆர். தங்கவேலு.

தொடர் கதை.

# தேவ தேவி

(வத்றுப் - சு. மீ. கணபதி)



(சென்ற இதழின் தொடர்ச்சி.)

"அப்பாவை அழைத்துச் செல்ல வேண்டுமென்றுதானே நான் இங்கு வந்தது. அவரை நான் அழைத்து வருவதை என் நண்பன் ஒருவன் எதிர் பார்த்திருப்பான். அப்பாவின் சௌகரியப்படி வீடு பார்க்க வேண்டுமென்று நினைத்து, நாளை இரவு சாப்பாடு எங்களிருவருக்கும் தயாராக வைத்திருக்கும்படி சொல்லி வந்தேன். அதனை நாளை மறுநாள் செய்யும்படி எழுத வேண்டும். லீவு இருக்கிறது. அதற்கு எழுத வேண்டியதில்லை."

"அப்பாவை அழைத்துப் போகவாவது? அது நடக்காது. அவர் என்னிடமேதானிருக்க வேண்டும். முன் போல நான் நடந்து கொள்வேன் என நினைக்காதே. நீ ஒரு வாரம் கழித்து ஊருக்குப் போகலாம். அப்பாவை அழைத்து வரவில்லை என்றும், ஒரு வாரத்திற்கு அப்பால் தான் வருவேன் என்றும் எழுதி விடு.— என்னப்பா! நான் சொல்கிறபடியே செய்யச் சொல்லுங்கள். வீட்டில் பெண்கள் இல்லாத நிலைமையில் அழைத்துப் போக முடியாது" என்றாள்.

"வாசு! கமலா சொல்கிறபடியே செய். உனக்கு மணமான பின்பு வேண்டுமானல் நான் வருகிறேன். என் மனமும் மாறிவிட்டது. நான் இங்கு, முன்பிருந்த சௌகரியங்களுக்கு மேல் ஆனந்தமாயிருக்கிறேன்" என்றார். வாசு அவர்கள் சொல்லியபடியே எழுதி அனுப்பிவிட்டான். பல விஷயங்களைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தனர். அப்பொழுது அங்கு ஒரு பெண் சுமார் பதினெட்டு வயதிருக்கும். டாம்பீகமும், நாகரீகமும் அவளை அலங்கரித்திருந்தது. வாசுவை, கமலா அவளுக்கு அறிமுகப் படுத்தினாள். "உங்களைச் சந்தித்தது பற்றி நான் சந்தோஷிக்கிறேன்" எனக் கூறி கைலாகு கொடுக்க கையை நீட்டினாள். அவளைப் பார்த்ததுமே வாசு வெறுப்படைந்தான். அவள் ஆங்கிலம் பேசி கையை நீட்டியதைப் பார்த்ததும் மிகவும் வெறுப்புக் கொண்டான். சரியான பாடம் கற்பிக்க வேண்டும்; அதனல் கமலாவுக்கும் பாடம் போதித்தது போலாகும் என அவன் நினைத்தான்.

"நீங்கள் என்னமோ இங்கிலீஷில் சொல்லுகிறீர்களே. எனக்கு இங்கிலீஷ் தெரியாது. உங்களுக்குத் தமிழ் தெரியாதா? அப்படியானல் நான் உங்களுடன் எப்படிப் பேச முடியு"மென்றான் வாசு. அவன் தகப்பனும், கமலாவும் பிரமித்தனர். அவர்கள் முகமும் சிறிது வாடிற்று.

"இவர்களின் சகோதரன் என்று உங்களைத் தெரிந்து கொண்டேன். உங்களுக்கு இங்கிலீஷ் தெரியுமென்று நினைத்தேன். உங்களை சிநேகம் செய்து கொண்டது எனக்குச் சந்தோஷம் என்று தான் கூறினேன். நீங்கள் எங்கு இருக்கிறீர்கள்? இதற்கு முன்பு உங்களை நான் பார்த்ததில்லை" என்றாள் வந்தவள்.

"நான் மதுரபுரி கலெக்டருடைய ஆபீஸி லிருக்கிறேன்; ஒன்றிரண்டு வார்த்தைகள் எனக்கு இங்கிலீஷில் தெரியு"மென்றான். எல்லோருடைய முகமும் வாட்டம் காண்பித்தது. கமலா சட்டென்று, "என்ன அண்ணா

உனக்கு பயித்தியமா? அவளிடம் பொய் சொல்லுகிறாய். உனக்கே வெட்கமா யில்லையா?'' என்றாள்.

“இதில் வெட்க மென்ன? கலெக்டர் என்று சொல்லச் சொல்கிறாயா? நீங்கள் கமலா கூறுவதை நம்பாதீர்கள். வேலையில் உயர்வு தாழ்வு ஒன்று மில்லை. நடக்கை சரியாக இருக்க வேண்டியது தான் தர்மம். சேவகம் என்று வந்துவிட்டால் பியூனும் சரி, கலெக்டரும் சரி. அவர்கள் செய்வது அரசாங்க சேவகம் தானே! இதில் தவறோ, அவமதிப்போ எதுவுமிருப்ப தாக நான் கருதவில்லை. அம்மா, நீங்கள் இந்த இடத்தில் மத்யஸ்தமாக இருப்பதாக நினைத்து சொல்லுங்கள். இதில் தாழ்வு இருக்கிறதா?'' என்றான்.

வந்த பெண் பிரமித்துப் போய் விட்டாள். தான் அங்கு வந்தது தவறு என நினைத்தாள். அவள் மனம் வேதனையடைந்தது. முகத்திலும் அக்குறி தென்பட்டது. கமலத்தின் முகத்துக்காக, “நீங்கள் சொல்வது சரிதான்'' என்று இழுத்தாள். பெரியவர் சிரித்தார். கமலாவுக்கு எரிச்சல் வந்தது. மிகவும் சிரமப் பட்டு மௌனம் சாதித்தாள். அவளுடைய பொறுமை எங்கோ சென்றுவிட்டதுபோல் உணர்ந்தாள். அசைவற்று தன் சகோதரன் முகத்தையும், வந்திருந்த பெண்ணின் முகத்தையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள். வாசு பேச ஆரம்பித்தான் சிரித்துக் கொண்டே.

“உங்களுடைய வார்த்தைகள் தவறுவது ஏன்? சிறிது ஆங்கிலம் கற்று விட்டால் துரை வீட்டுக் குழந்தைகள் என நினைத்துக் கொண்டு ஆங்கிலத்தி லேயே பேசுவது—பாஷை தெரியாதவரை அவமதிப்பது—தமிழே பேசி அறியாதவர் போன்று நடந்து கொள்கிறது--இதற்குத்தானா உங்களின் பெற் றோர்கள் கல்வி புகட்டியது? அறிவுக்காகக் கல்வி கற்பித்தார்களே தவிர அறிவை யிழப்பதற்காக வல்ல. ஆங்கிலத்தில் பேசுவதற்காகவுமல்ல. தமிழ் மிகவும் இனிமை பொருந்திய மொழி. அதை விலக்குவது மதியீனம். பெண் களே இதுபோன்று நடக்கத் தலைப்படின் குடும்பத்திற்கே அவர்கள் பெரிய கஷ்டத்தைக் கொடுக்கிறார்கள் என அவர்கள் நினைப்பதில்லை. ஆங்கிலத்தில் பேசினால்தானா தங்களுடைய அந்தஸ்து தெரியும்? என்ன மூட நம்பிக்கை இது? இதற்காகப் பிரசாரம் செய்தாலும் நன்றாக இருக்கும்போல் தெரி கிறது. என் சோதரிகளை நான் கேட்டுக் கொள்வதெல்லாம் கூடிய வரை அவர்கள் மேல் நாட்டுக் கல்வியைக் கற்றிருந்தாலும், தாய் மொழியிலேயே பேசவேண்டும் என்பதுதான். நீங்கள் எனக்குப் புதிதாகப் பழக்கமான வர்கள். வித்யாசமாக எடுத்துக்கொள்ளக் கூடாது. நான் பொதுவாக இருக்கும் நிலைமையைத்தான் சொல்கிறேன். தயவு செய்து இது போன்று இனியும் சம்பாஷிக்க முற்படாதீர்கள். எனக்கு ஆங்கிலம் தெரியாது என்ற உடன் எல்லோர் முகமும் சுருங்கியது. அவர்களிருவருக்கும் என்னைப் பற்றித் தெரியும். உங்களுக்குத்தான் என்னைத் தெரியாது. உங்கள் முகம் கோணியதைப் பார்த்து என்னை நாகரீக மற்றவன் என்று நினைத்துக் கொண்டதாக அறிந்தேன். ஆங்கிலம் இங்கிருக்கும் உங்களெல்லோரையும் விட அதிகம் நான் படித்திருக்கிறேன் எனவே எண்ணுகிறேன். உற வினன் சிறிது குறைந்த அந்தஸ்திலிருந்தால் அவனை ஆங்கிலம் கற்றுவிட்ட செருக்கால் மதிப்பதில்லை. உண்மையில் நடைபெறுவதைத் தான் நான் கூறுகிறேன். நீங்கள் அவ்விதம் நடப்பதாக நான் கருதவில்லை. விவகா ரத்திற்குச் சொல்லவேண்டி யிருக்கிறது. அதிகம் பேசினால் மரியாதைக் குறைவாகப் பேசுவதாக நீங்கள் நினைக்கலாம்'' என்று வாசு ஆங்கிலத்தி லேயே ஆவேசம் கொண்டவன்போல், உணர்ச்சி ததும்பப் பேசினான். எல் லோரும் அவன் வாயையே பார்த்துக் கொண்டிருந்தனர். அவன் முடித்த

தும் வந்தபெண், "நீங்கள் கூறியதெல்லாம் வாஸ்தவமாக நடைபெறுவது தான். நான் இனி நீங்கள் கூறியபடியே நடந்துகொள்ள முயற்சிப்பேன்" என்றாள்.

"பெரிய பிரசங்கத்தில் இறங்கிவிட்டாயே, அண்ணா! இன்னும் சிறிது நாட்களில் உத்யோகம் கூட வேண்டாமென்று மேடையில் பிரசங்கம் செய்ய ஆரம்பித்து விடுவாய் போலும். இவ்வளவு படித்திருந்தும் அநாகரீகமாய் நடந்துகொண்டதுதான் ஆச்சரியமாக இருக்கிறது. உன் நியாயங்களையும், அபிப்பிராயங்களையும், அறிவுறுத்துதலையும் புது மனிதரிடமா காண்பிப்பது?" என்றாள் கமலா.

"வாஸ்தவம்தான் கமலா. உணர்ச்சி வேகத்தால் தூண்டப் பெற்றுப் பேசிவிட்டேன். தயவுசெய்து மன்னிக்க வேண்டும்" என்றான் வந்த பெண்ணைப் பார்த்து—அவள் சிரித்தாள். பதில் பேசவில்லை. அதன் பின்பு சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்து விட்டு வந்த பெண் விடைபெற்றுச் சென்றாள். அவள் சென்றதும், "என்ன இந்தமாதிரி பேச ஆரம்பித்து விட்டாய்? மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்? இங்கு வந்திருந்தாளே விமலா, அவள் என்ன நினைத்துச் சென்றாளோ? யார் வந்தாலும் உன் பிரசாரத்தை ஆரம்பித்துவிடப் போகிறாய்? அதனால் என்னையும் வேறுமாதிரி நினைக்க ஆரம்பித்து விடுவார்கள்" என்றாள் கமலா.

"சந்தர்ப்பமில்லாமல் பேசிவிட்டான். அவன் பேசிய கருத்து ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். வாசு இப்படியே எல்லோரிடமும் நடந்து கொள்ளாதே. கொஞ்சம் அனுசரித்தே பேசு. ஆங்கிலத்தில் பேசினால் தவறு ஒன்றுமில்லை" என்றார் பெரியவர். வாசு பதில் கூறவேயில்லை. எதற்காக அவன் இவற்றைக் கூறினான் என்பதும், அதன் பலனும் அவனுக்குத் தெரிந்ததுதானே. வந்து சென்ற பெண்ணுக்கு அவன் மனதில் நன்றி தெரிவித்தான். பேச சந்தர்ப்பம் அவளாலல்லவா கிடைத்தது?

"உனக்கு இப்பொழுது சம்பளமென்ன? பிரமோஷன் ஆவதற்கு வழியிருக்கிறதானால் அதற்காக முயற்சி எடுத்துக்கொண் டிருக்கிறாயா? நான் நடந்துகொள்ள வேண்டியதைப்பற்றி இன்னும் ஏதாவது தெரிவிக்க விரும்புகிறாயா? எல்லாவற்றையும் சொல், இப்பொழுதும் நான் திருந்தியிருப்பது உன்னால்தான்" என்றாள் கமலா.

"என்னால் நீ திருந்தியிருக்கிறாய் என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது. ஆண்டவன் அருளால்தான். நான் உனக்குக் கற்பிக்க வேண்டியது ஒன்றுமில்லை. எனக்கு இப்பொழுது ரூபாய் நூறு சம்பளம். உயர்வு பற்றி நான் நினைக்கவோ, அதற்காக முயற்சிப்பதோ என் கடமையல்ல. வேளைவரின் தானே கிடைக்கிறது. முதலில் அறுபது ரூபாய் குமாஸ்தாவாகச் சேர்ந்து சில காலத்திற்கெல்லாம் எண்பத்தி ஐந்து ரூபாய் குமாஸ்தாவாக ஆனேன். அதிலேயே இப்பொழுது இந்த சம்பளம் வாங்குகிறேன். எனக்கு இது மிகவும் அதிகம். ஆகவே, உயர்வை நான் விரும்பவே யில்லை"

"இவ்வளவு சம்பாத்தியத்தில் தனிமையிலிருப்பதால் அதிகமாகக் காண்கிறது. வீட்டிற்கு ஒருத்தி வந்த பிற்பாடு தெரியும். இப்பொழுது வந்து சென்றாளே ஒருபெண், அவளை உனக்குப் பிடித்திருக்கிறதா?"

"உன் கேள்வியின் அர்த்தம் புரிந்துகொள்ள் முடியாமலிருக்கிறது. அந்தப் பெண்ணை எனக்கு மணமுடிக்க உத்தேசிக்கிறாயானால் அது முடியாது என்றுதான் சொல்வேன். மற்றப்படி அப் பெண்ணை வெறுக்கக் காரணமில்லை."

"ஆனால் வேறு பல பெண்கள் இருக்கிறார்கள். நீ சொன்னால் இங்கு அழைத்துவர ஏற்பாடு செய்கிறேன். உன் மனதிற்கு இசைந்த ஒரு பெண்ணைச் சொன்னால் முடித்துவிடுவோம். உனக்கும் வயதாகி விட்டது. எவ்வளவுகாலம் இப்படியே யிருப்பது? அப்பா, நீங்கள் பேசாமலிருக்கக் கூடாது. வேண்டிய ஏற்பாடுகள் உடனே செய்யவேண்டும்."

"கமலா இந்தப் பொறுப்பு, கவலைகள் உனக்கும், எனக்கும், அப்பாவுக்கும் வேண்டாம். காலமிருக்கிறது. அது நடத்திவிட்டுப் போகிறது. நாமாக முயற்சித்தால் காரியம் நடந்து விடாது. நீங்கள் இருங்கள். வெளியே வேலையிருக்கிறது. பார்த்துவிட்டு வந்துவிடுகிறேன்."

"வெளியே வேலையா? உனக்கா? ஆச்சரியமாயிருக்கிறது. ஊருக்கே நீ புதியவன். தபாலாபீஸிருக்குமிடம் கேட்ட நீ வெளியில் என்ன வேலையாகப் போகிறாய்? அதை முதலில் சொல்."

"சொந்த வேலை. ஊருக்குப் புதிதானாலும் இடம் தெரியும். வயிற்றுக்கு ஏதாவது இருக்க வேண்டாமா? பேசிக் கொண்டே யிருந்தால் பசி அடங்கும் வழி தெரியவில்லை. அதற்காகத் தான் வெளியே போக வேண்டும்."

"பேசாமல் உட்கார். எல்லாம் தானே வரும். கேட்பதற்கு வெட்கமென்ன?" என்று கூறி உள்ளே சென்று வந்தாள். வேலைக்காரி பலகாரங்களும், பானமும் கொண்டு வந்து கொடுத்தாள். "நன்றாக சாப்பிடு அண்ணா! போன தடவை போல் ஹோட்டல் ஆகாரம் சாப்பிடவேண்டியதில்லை. இங்கு சங்கோசமும் கொள்ள வேண்டாம். எவ்வளவு வேண்டுமாகிலும் கேட்டுச் சாப்பிடு. ஒருவரும் திருஷ்டி வைக்க மாட்டார்கள்" என்றாள் கமலா. எல்லோரும் சிரித்தனர்.

———o———

# ஒன்பதாவது அத்தியாயம்

---

## லேடீஸ் கிளப்

ஒரு ஸ்திரீயின் மனதில் ஒரு எண்ணம் உதித்து விட்டால் அதனை முடித்த பின்பு மற்ற காரியங்களில் பிரவேசிக்க அவள் மனம் விரும்பும். அதிலும் ஒருவித பாசத்தால் கட்டுப்பட்ட ஸ்திரீ—அல்லது தன்கடமை எனக் கருதும் ஸ்திரீ-காரியத்தை முடிக்காமலிருக்க மாட்டாள். ஸ்திரீயின் மனம் இளகியது என்கிறார்கள். இதுபோன்ற சமயங்களில் அவர்களது இருதயம் கல்போன்ற நிலைமைக்கு வந்து விடும் என்றுதான் கூறுதல் வேண்டும். காரியத்தில் அவ்வளவு கருத்து உடையவர்கள்.

கமலாவின் இல்லமிருந்து சென்ற விமலா, நேராகத் தன் வீடடைந்தாள். அவன்—கமலாவின் சகோதரன் நடந்து கொண்டதும், பிரசங்கித்ததும், மன்னிப்புக் கேட்டதும் அவள் மனதைவிட்டுச் சிறிதும் அகலவில்லை. வெகுநேரம் அதைப்பற்றிச் சிந்தித்த பின்பு ஒரு முடிவுசெய்தாள். லேடீஸ் கிளப்புக்குச் சென்றாள். இவள் லேடீஸ் கிளப்பில் உதவிக் காரியதரிசி. இவள் சென்றதும் தலைவி, காரியதரிசி இருவரையும் தனிமையில் ஒரு அறைக்குள் அழைத்துச் சென்றாள்.

"இந்த ஊருக்கு ஒரு கட்டுப் பெட்டி வந்திருக்கிறது. கலா சாலையில் படித்திருக்கிறது. அருமையாக உணர்ச்சி ததும்ப அது பேசுகிறது. நமது

கிளப்பில் இந்த வாரத்தில் அதைப் பிரசங்கம் செய்ய அழைக்க வேண்டும். என் வேண்டுகோளை மறுக்கக் கூடாது."

"இதென்ன கட்டுப் பெட்டி-கலாசாலையில் படித்தது என்கிறாயே-மனித ஜன்மத்தையா இந்த மாதிரி கூறுகிறாய்? ஆணா பெண்ணா என்றும் கூற வில்லை. நன்றாகப் பிரசங்கம் செய்யத் தெரிகிறதா? யார் வீட்டிற்கு வந்திருக்கிறது. விபரமாய்ச் சொன்னால் சென்று பார்த்து விட்டு வருவோம்."

"மிஸஸ் கமலா காந்தன்—சப் கலெக்டர் வீட்டில். அவளுடைய சகோதரனும். அவன் எங்கு உத்யோகம் செய்கிறான்—என்ன உத்யோகம் என்று தெரியவில்லை. நான் இங்கிலீஷில் பேசியதற்கு அப்பப்பா அது ஒரு பிரசங்கமே ஆங்கிலத்தில் செய்து உபதேசம் செய்து விட்டது. நல்ல கருத்துக்கள். அவசியம் நம் கிளப்புக்கு அழைத்து வந்து பிரசங்கிக்கச் சொல்ல வேண்டும்."

"நீ சொல்வதைப் பார்த்தால் அநாகரீகப் பேர்வழிபோ லிருக்கிறதே! எதையாவது உளறிவிட்டுப் போனதானால் நன்றாயிருக்காதே."

"மிகவும் அருமையான கருத்துகள். இங்கிலீஷிலேயே பிரசங்கம் செய்யும்படி கேட்டுக்கொள்ள வேண்டும். நாம் தமிழில்தான் அதன்கூடப் பேசவேண்டும். இல்லையானால் நமக்கு அங்கேயே ஒரு குட்டிப் பிரசங்கம் நடந்துவிடும்."

"உங்களுக்குத் தமிழ் பேச வரும். நான் தமிழில் பேச முடியாதே. ஒவ்வொரு வார்த்தைகள் தானே எனக்குத் தெரியும். அதற்கென் செய்வது? என்றாள் காரியதரிசியான பூர்ணிமா. இவள் வடதேசத்தைச் சேர்ந்தவள்.

"உங்களைப் பார்த்ததும் அது தெரிந்துகொள்ளும். அதைப்பற்றிய கவலைவேண்டாம். நீங்களும் வந்தால்தானே அதை அழைப்பது மரியாதையா யிருக்கும். நாம் எப்பொழுது போகலாம்? என்றாள் விமலா.

"அந்த மனிதனை எதைப்பற்றிப் பேசச் சொல்வது—தலைமை வகிக்க வேறு ஆடவர் வேண்டுமா—எல்லோரையும் அழைத்தல் வேண்டுமா முதலிய சங்கதிகள் பேசிக்கொண்டு, இப்பொழுதே அவரைச் சென்று பார்க்கலா" மென்றாள் காரியதரிசி.

"சப்கலெக்டரையே தலைமை வகிக்கச் சொல்லலாம். அவர் உருப்படியாக கருத்துக்களுடன் பேசுவார் என நான் நிச்சயமாக நம்புகிறேன். அதனால் நமது கிளப் அங்கத்தினர்களை, அவர்கள் கணவர்களுடன் பிரசங்கத்திற்கு வரும்படியாகச் சொல்ல வேண்டும் என்பதே என் எண்ணம்."

"ஆம். நீ சொல்கிறபடி செய்து விட்டால் விளம்பரச் செலவு மீதமாகும். ஆனால் அந்த மனிதன் ஒத்துக் கொள்ள வேண்டும். தலைமை வகிப்பதற்கு சப் கலெக்டரும் ஒப்புக் கொள்ள வேண்டும். தவிரவும் நமது அங்கத்தினரில் யாராவது ஒருவரும் அன்று பேச ஏற்பாடு செய்ய வேண்டும். ஏன் பூர்ணிமா தேவியே பேசட்டும்" என்றாள் தலைவி.

"அதைப்பற்றி இப்பொழுது கவலையில்லை. முதலில் அவரைப் பார்த்து வரலாம்" என்றாள் காரியதரிசி. உடனே மூவரும் காரிலேறி வாசு இருக்குமிடம் வந்தார்கள்.

சேவகன் மூலம் தகவலறிந்து அவர்களை உள்ளே அழைத்து வரும்படி சொன்னாள் கமலா. வாசு எழுந்திருக்கப் பார்த்தான். "நீ உட்கார்ந்திரு. எங்கும் செல்ல வேண்டாம். ஆடவரைக் கண்டு வெட்கப் படும் பெண்களல்ல இப்பொழுது வருபவர்கள். எங்கள் கிளப்பின் தலைவி, காரியதரிசி, உதவிக் காரியதரிசி இவர்கள்தான் வருகிறார்கள்" என்று பேசிவந்தவள் அவர்கள் வருவதைப் பார்த்து இங்கிலீஷில், "உங்கள் வரவு நல்வரவாகுக. உட்காருங்கள்" என்றாள்.

(தொடரும்)

# தாரண ஹு வைகாசிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம்

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடிகாரமணி-சென்னை காலை 6½-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| | | | | | | | | | | (வ) | | | | | | | | | |
| 1 | 15 | 26 | 35 | 30 | 07 | 281 | 00 | 92 | 02 | 13 | 57 | 115 | 30 | 18 | 12 | 62 | 22 | 98 | 08 |
| 2 | 15 | 30 | 32 | 31 | 05 | 295 | 02 | 92 | 39 | 13 | 53 | 115 | 35 | 19 | 25 | 62 | 29 | 98 | 05 |
| 3 | 15 | 34 | 28 | 32 | 03 | 309 | 04 | 93 | 17 | 13 | 50 | 115 | 41 | 20 | 39 | 62 | 36 | 98 | 02 |
| | | | | | | | | | | (வநி) | | | | | | | | | |
| 4 | 15 | 38 | 25 | 33 | 01 | 323 | 20 | 93 | 51 | 13 | 55 | 115 | 47 | 21 | 53 | 62 | 43 | 97 | 59 |
| 5 | 15 | 42 | 21 | 33 | 58 | 337 | 37 | 94 | 25 | 14 | 01 | 115 | 53 | 23 | 07 | 62 | 50 | 97 | 55 |
| 6 | 15 | 46 | 18 | 34 | 55 | 351 | 57 | 94 | 59 | 14 | 15 | 115 | 59 | 24 | 21 | 62 | 57 | 97 | 52 |
| 7 | 15 | 50 | 14 | 35 | 53 | 6 | 18 | 95 | 34 | 14 | 30 | 116 | 06 | 25 | 34 | 63 | 05 | 97 | 49 |
| 8 | 15 | 54 | 11 | 36 | 51 | 20 | 24 | 96 | 08 | 14 | 53 | 116 | 12 | 26 | 47 | 63 | 12 | 97 | 46 |
| 9 | 15 | 58 | 07 | 37 | 49 | 34 | 30 | 96 | 42 | 15 | 16 | 116 | 18 | 28 | 01 | 63 | 19 | 97 | 43 |
| 10 | 16 | 02 | 04 | 38 | 46 | 48 | 02 | 97 | 16 | 15 | 48 | 116 | 24 | 29 | 14 | 63 | 26 | 97 | 40 |
| 11 | 16 | 06 | 00 | 39 | 44 | 61 | 33 | 97 | 51 | 16 | 20 | 116 | 31 | 30 | 28 | 63 | 34 | 97 | 36 |
| 12 | 16 | 09 | 57 | 40 | 41 | 74 | 23 | 98 | 26 | 16 | 59 | 116 | 38 | 31 | 42 | 63 | 41 | 97 | 33 |
| 13 | 16 | 13 | 53 | 41 | 39 | 87 | 13 | 99 | 01 | 17 | 39 | 116 | 45 | 32 | 54 | 63 | 48 | 97 | 30 |
| 14 | 16 | 17 | 50 | 42 | 36 | 99 | 27 | 99 | 36 | 18 | 26 | 116 | 52 | 34 | 09 | 63 | 55 | 97 | 27 |
| 15 | 16 | 21 | 46 | 43 | 34 | 111 | 40 | 100 | 10 | 19 | 13 | 117 | 00 | 35 | 23 | 64 | 03 | 97 | 24 |
| 16 | 16 | 25 | 43 | 44 | 32 | 123 | 34 | 100 | 45 | 20 | 03 | 117 | 07 | 36 | 36 | 64 | 10 | 97 | 21 |
| 17 | 16 | 29 | 40 | 45 | 30 | 135 | 27 | 101 | 20 | 20 | 53 | 117 | 15 | 37 | 50 | 64 | 18 | 97 | 17 |
| 18 | 16 | 33 | 37 | 46 | 27 | 147 | 21 | 101 | 55 | 21 | 58 | 117 | 22 | 39 | 03 | 64 | 25 | 97 | 14 |
| 19 | 16 | 37 | 33 | 47 | 25 | 159 | 14 | 102 | 30 | 23 | 03 | 117 | 30 | 40 | 17 | 64 | 33 | 97 | 11 |
| 20 | 16 | 41 | 30 | 48 | 22 | 171 | 26 | 103 | 05 | 24 | 10 | 117 | 38 | 41 | 31 | 64 | 41 | 97 | 08 |
| 21 | 16 | 45 | 26 | 49 | 20 | 183 | 39 | 103 | 40 | 25 | 18 | 117 | 46 | 42 | 45 | 64 | 49 | 97 | 04 |
| 22 | 16 | 49 | 23 | 50 | 17 | 196 | 23 | 104 | 15 | 26 | 31 | 117 | 54 | 43 | 58 | ( 4 | 56 | 97 | 01 |
| 23 | 16 | 53 | 19 | 51 | 14 | 209 | 08 | 104 | 50 | 27 | 45 | 118 | 03 | 45 | 12 | 65 | 04 | 96 | 58 |
| 24 | 16 | 57 | 16 | 52 | 11 | 222 | 26 | 105 | 25 | 29 | 04 | 118 | 11 | 46 | 25 | 65 | 12 | 96 | 55 |
| 25 | 17 | 01 | 12 | 53 | 09 | 235 | 45 | 106 | 00 | 30 | 24 | 118 | 19 | 47 | 39 | 65 | 20 | 96 | 52 |
| 26 | 17 | 05 | 09 | 54 | 06 | 249 | 31 | 106 | 35 | 31 | 49 | 118 | 27 | 48 | 53 | 65 | 27 | 96 | 49 |
| 27 | 17 | 09 | 05 | 55 | 03 | 263 | 17 | 107 | 11 | 33 | 15 | 118 | 36 | 50 | 06 | 65 | 35 | 96 | 45 |
| 28 | 17 | 13 | 02 | 56 | 00 | 277 | 24 | 107 | 46 | 34 | 46 | 118 | 45 | 51 | 20 | 65 | 42 | 96 | 42 |
| 29 | 17 | 16 | 58 | 56 | 57 | 291 | 31 | 108 | 21 | 36 | 17 | 118 | 54 | 52 | 34 | 65 | 50 | 96 | 39 |
| 30 | 17 | 20 | 51 | 57 | 54 | 305 | 48 | 108 | 56 | 37 | 53 | 119 | 03 | 53 | 47 | 65 | 57 | 96 | 36 |
| 31 | 17 | 24 | 51 | 58 | 51 | 320 | 06 | 109 | 32 | 39 | 30 | 119 | 13 | 55 | 01 | 66 | 05 | 96 | 33 |

ஆகாயக் காட்சி:-
*7வ முன் இரவு மணி 7-48க்கு சசிக்கு வடக்கில் பா 1 - 46ல்* **புதனும்,**
*8வ மாலை ,, 7-18க்கு ,, ,, பா 3 - 50ல்* **சுக்ரனும்,**
*11வ முற்பகல் ,, 10-24க்கு ,, ,, பா 1 - 59ல்* **சனியும்,**
*13வ பின் இரவு ,, 3-15க்கு ,, ,, பா 1 - 17ல்* **குஜனும்,**
*15வ மாலை ,, 6-30க்கு ,, தெற்கில் பா 0 - 26ல்* **குருவும்,**
*சந்திரன் ஸமாகமம்.*

**பிரவேசங்கள் முதலியன:—***10வ முன் இரவு மணி 8-40க்கு சுக்ரனும், 24வ முன் இரவு மணி 11-01க்கு புதனும் மேஷமிருந்து ரிஷபத்திற்கு பிரவேசிக்கின்றனர். 4வ புதன் வக்ர தியாகம்; 13வ சுக்ரன் கிழக்கில் மகாஸ்தமனம்; 21வ சனி மேற்கில் அஸ்தமனம், இம்மாதம் முழுவதும் புத-சுக்ர ஸாமீப்யம்.*

*** அயனாம்சம் பா-22 கலை-56 விகலை 53·4531 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.**

**† ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.**

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

தாரண ஹு வைகாசிமீ கலியுகாதி 5045, சாலிவாகனம் 1866
பசலி 1353, கொல்லமாண்டு 1119, ஹிஜிரா 1363
இங்கிலீஷ் 1944ஹு மேமீ—1944ஹு ஜூன்மீ

| வைகாசி | மே மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | ஞா | சஷ்0-37 சப்54-33 | திரு48-35 | அ48-35ம | விஷ்ணுபதி புண்யகாலம் அவமாகம் |
| 2 | 15 | திங் | அ48-41 | அ44-23 | சித்60 | மந்திரார்த்தங்கள் |
| 3 | 16 | செவ் | நவ42-38 | சத40-11 | மர60 | நவக்கிரக சாந்தி |
| 4 | 17 | புத | தச36-29 | பூ36-07 | அ36-07சி | ஆராய்ச்சிகள் |
| 5 | 18 | வியா | ஏ30-42 | உட்32-25 | சித்60 | அபர ஏகாதசி - சர்வ மத்வ ஏகாதசி |
| 6 | 19 | வெள் | து25-12 | ரே28-49 | சி28-49அ | பிரதோஷம் |
| 7 | 20 | சனி | திர20-24 | அசு25-51 | சித்60 | மாச சிவராத்திரி, கரிநாள் |
| 8 | 21 | ஞா | ச●16-13 | ப❋23-26 | பி23-26சி | அமாவாஸ்யை, கிருத்திகை விரதம் |
| 9 | 22 | திங் | அ13-09 | கார்22-13 | ம22-13அ | ஆராய்ச்சிகள் |
| 10 | 23 | செவ் | பிர10-49 | ரோ22-37 | அ22-37சி | ஜ்யேஷ்ட சுத்தம் |
| 11 | 24 | புத | துதி9-37 | மிரு23-27 | சித்60 | சந்திர தர்ஸனம் |
| 12 | 25 | வியா | திரு10-13 | திரு25-47 | ம25-47அ | மாஸ சதுர்த்தி விரதம் |
| 13 | 26 | வெள் | சது11-24 | புன29-28 | சித்60 | கலே பயில |
| 14 | 27 | சனி | பஞ்14-27 | பூச33-38 | சி38-38ம | சஷ்டி விரதம் - ஆரண்ய கௌரீ விரதம் |
| 15 | 28 | ஞா | சஷ்18-03 | ஆ38-57 | சி38-57ம | |
| 16 | 29 | திங் | சப்22-49 | மக45-39 | ம45-39சி | |
| 17 | 30 | செவ் | அ27-38 | பூர52-16 | சி52-16அ | |
| 18 | 31 | புத | நவ32-23 | உத்58-47 | அ58-47ம | |
| 19 | 1944ஹு ஜூன்மீ 1 | வியா | தச37-17 | அ60-00 | சித்60 | |
| 20 | 2 | வெள் | ஏ40-49 | அ4-13 | அ4-13சி | |
| 21 | 3 | சனி | துவ43-13 | சித்9-08 | ம9-08சி | |
| 22 | 4 | ஞா | திர45-16 | சு13-13 | அ13-13ம | |
| 23 | 5 | திங் | சசி45-52 | வி16-19 | ம16-19சி | |
| 24 | 6 | செவ் | ப○44-26 | அ17-25 | சி17-25ம | பௌர்ணமி விரதம் |
| 25 | 7 | புத | பிர42-37 | கே17-20 | சி17-20ம | ஜ்யேஷ்ட பகுளம் [தினம் |
| 26 | 8 | வியா | துதி39-33 | மூல16-48 | சித்60 | ஸத்ய பூர்ண தீர்த்த புண்ய |
| 27 | 9 | வெள் | திரு35-24 | பூ14-57 | பி14-57சி | ரகுவாரிய தீர்த்த புண்ய |
| 28 | 10 | சனி | சது30-37 | உத்12-37 | சித்60 | ஸங்கடசதுர்த்தி [தினம் |
| 29 | 11 | ஞா | பஞ்24-41 | திரு9-13 | அ9-09ம | விவாகம் |
| 30 | 12 | திங் | சஷ்18-36 | அ4-19 | சித்60 | இரஸாயனங்கள் |
| 31 | 13 | செவ் | சப்12-42 | சத0-16 பூர56-25 | மர60 | திரிலோசன பூஜா - அவமாகம் |

| | | | |
|---|---|---|---|
| | சுக்-புத | சூரி | சனி |
| கே | 17-ரிஷ-சுக் 24-ரிஷ-புத | | செ ரா கு |
| | | | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
NO. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS

# பூவுலக வாழ்க்கைக்கு இன்றியமையாத சிங்கபலத்தைத் தருவதெது ?




**விளம்பரம்.**

இதைக் கண்ணுறும் கனவான்களே ! இந்த லேகிய செந்தூரங்கள் சாமான்யமானவைகளல்ல. அபாரமான பலத்தைத் தரக்கூடிய சக்தி அமைந்துள்ளவை. உறுதியாய் இவற்றை நம்பி வாங்கிச் சாப்பிட்டால் ஒரு தடவையிலேயே இவற்றின் குணம் நன்கு விளங்கும்.

தற்சாலத்தில் மனிதரின் பால்ய சேஷ்டையாலும், இரத்தப் போக்காலும் அவர்க்கு உண்டான 20-வகை ரோகங்கள், சூலைரோகம், குன்ம ரோகம், பித்தபாண்டு, கை கால் முடக்கு, ஓடுவாய்வு, பித்த ஏப்பம், நெஞ்சு தொண்டை எரிச்சல், வயிற்றுப்பிசம், அஜீரணம், பசியில்லாமை, தாது ஹீனம், தேக உளைச்சல், கண்ணில் நீர்வடிதல், சோம்பல், நித்திரை யில்லாமை, தலை சுழற்றல், நீர் இறங்கும்போது பொறுக்க முடியாத பாதையைத் தரும் தந்திமேகம் முதலியவைகள் ஆச்சரியப்படத்தக்க விதமாய் நீக்கிவிடும். பயங்கரமான மேக சம்பந்த வியாதிகளைப் பத்தே வேளையில் போக்கி சப்த நரம்புகளுக்கும் முருக்கேற்றி அபரிமிதமான ரத்த விருத்தியைப் பெருக்கிப் பலத்தைத் தருவதில் இதற்கு மிஞ்சின லேகிய பஸ்பம் வேறெங்குமில்லை என்று நாம் உறுதியாகச் சொல்லுவோம். இதல்லாமல் தேகத்தை புஷ்டியாக்கித் தேகத்தடிப்பு, நகக்கண் வெளுத்திருத்தல் முதலிய வியாதிகளைக் கண்டித்து, தினந்தோறும் மலத்தைத் தாராளமாய்ப் போக்குவதில் இந்த லேகிய செந்தூரங்களே முதன்மையானவை யென்பதே யாம் எமது அனுபவத்தில் கண்டிருக்கிறோம். நிற்க

# சர்வதேள் விஷ சஞ்சீவினி.

(ரிஜிஸ்டர் டிரேட் மார்க்)

**பட்டவுடனே விஷம் பறக்கும்! அழுதவன் சிரிப்பான்!!**

**இதில் குணமில்லையென்று நிரூபிப்பவர்களுக்கு 100-ரூபாய் இனம்.**




நமது நாட்டிற்கு இது அவசியமாய் ஒவ்வொரு குடும்பத்திலும் சதா கையிருப்பில் இருக்கவேண்டிய ஓர் ஔஷதமாகும். இது ஆங்கில யூனானி தமிழ் வைத்திய நிபுணர்களால் நன்கு மதிக்கப்பட்டுள்ளது. இதை நாள்பட வைத்திருப்பதால் இதன்குணம் சற்றும் குறையாது. தேள், நட்டுவாய்க்காலி, செய்யான், பாம்பு, எலி முதலியவற்றின் விஷங்களை இரண்டொரு நிமிஷங்களில் இது அடியோடு நீக்கக்கூடியது. எண்ணிறந்தோர் இதனுல் சுகமடைந்திருப்பது பிரத்தியக்ஷ அனுபவமானதால் இதைப்பற்றி நாம் அதிகம் கூறவேண்டியதில்லை. இது இரண்டுவித மருந்துகள் அடங்கியது. இதை உபயோகிக்கும் முறை மருந்தோடு அனுப்பப்படும்.

விலை:—இரண்டுவித மருந்தும் அடங்கிய பாக்கெட் 1-க்கு அணு 8. தபாற் கூலி அணு 4. டஜன் 1-க்கு விலை ரூபா 5.

**ஏககாலத்தில் 3-பாக்கெட் வாங்குவோருக்குத் தபாற்கூலி இனம், வியாபாரிகளுக்கு 100-க்கு 25 கமிஷன் கொடுக்கப்படும்.**

# மேஹ ராஜ சஞ்சீவி எண்ணெய்



இந்த எண்ணெயை ஒருமுறை மூன்றுநாள் சாப்பிட்ட மாத்திரத்திலேயே, கிரந்தி. மேக தாமரை, மேக நமைச்சல், மேக இரணம்; மேகப் புண், கால் கைகளிலே சேரும் மேக துர்நீர், மேக வெடிப்பு, எல்லா வகைகளான வெள்ளை, மூத்திரக் கருவியிலே தோன்றும் பலவித வியாதிகள் தீரும். அநேக காலமாக இருக்கும் வியாதிகளுக்கு ஒருமுறை சாப்பிட்டு, 15 நாள் பொறுத்து, மற்றொருமுறை சாப்பிடவேண்டும்.

3-நாள் எண்ணெய், புட்டி 1-க்கு ரூபா 1—8—0; மருந்து ஆர்டர் செய்யும்போது வியாதியின் பூரண நிலவரத்தை தெரியப்படுத்தவும்.

# சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 5-வரை திரேக திடமறிந்து மாத்திரையைச் சாப்பிட்டு கொஞ்சம் ஜலம் சாப்பிடவும். இவ்விதம் சாப்பிட்டால் சுகமாய் பேதியாகிவிடும். மாத்திரையை அனுப்பும்பொழுது உபயோகிக்கும் முறை தெரிந்துகொள்ளலாம்.

25-மாத்திரை அடங்கிய புட்டி 1-க்கு விலை அணு 6.

---

**தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.**

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்

**ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை**

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5-பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன் 2பாகம் | 3 | 4 |
| மதனும்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகநாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9-பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாஸனி ... | 0 | 14 |
| ஆனந்தஸிங் ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| அரசூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| தத்வசங்க்ரஹ ராமாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சருடைய சரித்திரமும் உபதேசங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா மெடிகா ... | 3 | 0 |
| மாதவி மாதவன் 2-பாகம் ... | 2 | 0 |
| மலையாள பகவதி ... | 1 | 0 |
| அற்புத நவநீத ரம்பை ... | 1 | 0 |
| அகட விகட விலாச விநோதம் | 0 | 10 |
| சீமாட்டி கார்த்தியாயினி ... | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| துயராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயணவசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| முப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 3 |
| பரசுராமன் ... | 0 | 3 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணாகரரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி ... | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதலி ... | 0 | 8 |
| மேனமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணாகானன் ஞானேந்திரி ... | 0 | 8 |
| மனோன்மணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| [illegible] மறந்த கதை ... | 0 | [illegible] |

**இந்திர கவசமெனும் சர்வ தேவதா விசயம்**

முதல் பாகமும் இரண்டாம் பாகமும் சேர்ந்தது விலை ரூபா 1.

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

# அயத்தங்கத் திராவகம்

மித்திரர்களே! இந்த அபூர்வ மருந்தானது அநேக கொடிய வியாதிகளை ஆச்சரியமாகக் கண்டிக்கக் கூடியது. இதை அநேக ஆயிரக் கணக்கான ஜனங்கள் உபயோகித்துச் சந்தோஷிககின்றனர். வியாதியினலாவது வேறு எந்தக் காரணத்தினலாவது இளைத்துப்போயிருக்கும் தேகத்தைப் புஷ்டியாக்கி பலவிருத்தி தருவதில் இது நிகரற்ற மருந்தாகும். ஆங்கிலேய முறைப்படி தயாரிக்கப்பட்ட அருமையான மருந்து. சாப்பிடுவதற்கு மிக இன்பமாயிருக்கும். இருமல் நோய்கண்டு அவஸ்தைப்படுபவர்கள் இதை உட்கொண்டால் இரண்டே வேளையில் ஆச்சரியமான சுகத்தை யடைவார்கள். இதனல் உண்டாகக் கூடிய அநேக குணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிக்கிறோம்.



இது, நரைத்த மயிரைக் கருப்பாக்கும், உஷ்ணத்தினலாவது, புழு வெட்டினலாவது மயிர் உதிர்வதை நிறுத்தும்: இதனல் நீர் வியாதிகள் தீரும். கண்ணெரிச்சல், கை கால் காந்தல் இவை தீரும். இன்னும் இது முக வசீகரத்தை உண்டாக்கும். தேக அசதியை யோட்டும். ஜீரண சக்தியையும், நல்ல பசியையும் உண்டாக்கும். மனதை அதிக உற்சாகப்படுத்தும், நரம்புகளுக்கு அதிக வலுவைத் தரும், தேகத்தில் நல்ல இரத்தத்தைச் சுரப்பிக்கும், க்ஷயரோகத்தை க்ஷணத்தில் தீர்க்கும், சத்த தாதுக்களுக்கும் நல்ல பலத்தை தரும், மூலச்சூடு, மூலவாய்வு, மலச்சிக்கல் ஆகியவை தீரும்.

இந்தச் சஞ்சீவியை நல்ல போஜனத்துடன் 15 நாள் சாப்பிட்டால் இணையில்லாத ஆனந்தத்தைத் தரும். மனிதர் தாம் இழந்துபோன தேக திடத்தைப் பழையபடி யடைவதற்கு இதைவிட வேறு மருந்தே கிடையாது. ஒருவர் 40-நாள் மருந்தை உட்கொள்ளும் பக்ஷத்தில் அவனுடைய தேகம் வஜ்ஜிரமேயாகும். இதற்கு யாதொரு பத்தியமும் கிடையாது.

20-நாள் மருந்து விலை ரூபா 1. 40-நாள் மருந்து விலை ரூபா 1-12-0.

# நரை மயிர் கருக்குந் தைலம்

தற்காலத்தில் பலவிதமாகச் செய்து விற்கப்பட்டு வருகிற கப்புகள் மயிரைச் செம்பட்டையாகவும், பசுமை நிறமாகவும், சாம்பல் வர்ணமாகவும் ஆக்கி விகாரப்படுத்தி விடுகின்றன. நமது தைலமோ நரைத்த மயிருக்குப் பூசிய 3 நிமிஷத்திற்குள்ளாக நரைப்பதற்கு முன்பிருந்த கருமை நிறத்தையும் பளபளப்பையும் உண்டுபண்ணும், மேலே கூறியுள்ள விகார குணங்கள் இதில் உண்டாகமாட்டா. இதைப் பூசிய பிறகு முகலட்சணமும் வசீகரமு முண்டாகிறபடியால் வயோதிகரும் வாலிபரைப்போல் தோற்றப்படுவார்கள். இதை உபயோகிக்கும் விதம் பார்சலோடு தெரிவிக்கப்படும். இதன் விலை ரூபா 1.



Edited, Printed and Published by N. Munisami [illegible], at the "Ananda Bodhini Press," No. 8, L[illegible] Chinnathambi Mudali Street, Sowcarpet, Madras.